# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



அ.தி.மு.க.- இயற்கை
தி.மு.க.- செயற்கை

KALKI • 26.04.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



மேயரோடு மோதல்!

- ஃபாஸ்ட் ஃபுட் யானைகள்!
- குலம் காக்கும் கோனியம்மன்!

கோவை மாவட்ட ஸ்பெஷல் - 1

விறுவிறு நரேன்...

# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

"சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள்". அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர்**
**அண்டு ஆஸ்பிட்டல்,**
**901, திருச்சி ரோடு,**
**இராமநாதபுரம்,**
**கோயம்புத்தூர் 641 045.**
**0422-2323456, 2323333**

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம்.
ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!




**GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)**

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com    Web : www.urogynecology.in

# சதை... உதை...கதை?

அஜித் நடிக்கும் 'அசல்' படத் துவக்க விழா சிவாஜி கணேசனின் 'அன்னை இல்லத்தில்' நடைபெற்றது. விழாவில் கிடைத்த துளிகள்...

'அசல்' படப்பிடிப்பை தன் கையால் க்ளாப் போர்டு அடித்துத் துவக்கி வைத்தார் இயக்குநர் கே.பாலசந்தர். சிஷ்யரான சரணின் (இவர்தான் இயக்குநர்) முகத்தில் தௌசண்ட் வாட்ஸ் பல்பின் வெளிச்சம்.

தயாரிப்பாளர் பிரபு தொழில்நுட்பக் கலைஞர்களை வாழ்த்திப் பேசிக் கொண்டிருக்கும்போதே தன் மகள் சௌந்தர்யாவோடு உள்ளே நுழைந்தார் சூப்பர் ஸ்டார். இவர் வாழ்த்திப் பேசும்போது, நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வீடான அன்னை இல்லத்தை ''தென்னாட்டுத் திரை உலகின் தாய்வீடு'' என்று குறிப்பிட்டார். முதன் முதலாக சூப்பர் ஸ்டார் தன் மகளோடு கலந்து கொள்ளும் படப்பிடிப்பு இதுதானாம்!

கவிஞர் வைரமுத்துவுக்கு சிவாஜி புரொடக்ஷன்ஸில் முதல் பாட்டு எழுதும் வாய்ப்பு, அவர்களது பத்தொன்பதாவது தயாரிப்பான இந்தப் படத்தில்தான் கிடைத்திருக்கிறது. ''முதல் அசல் கலைஞன் சிவாஜி கணேசன். அந்தச் சரித்திரம் வாழ்ந்த, வாழுகிற இடத்தில் 'அசல்' படப்பிடிப்பு துவங்குவதில் பெருமைப்படுகிறேன்'' என்றார்.

''தமிழ் சினிமாவில் கதாசிரியர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள், பெரும்பாலான படங்களில் சதையிருக்கு, உதையிருக்கு, கதையிருக்கா என்றால், இல்லை. ஆனால் 'அசல்' படத்தில் கதையை நிச்சயம் எதிர்பார்க்கலாம்'' என்றார் யூகிசேது. திரைக்கதை-வசனத்தில் இயக்குநரோடு கைகோக்கிறார்.

தன் கல்லூரி நண்பரான ஆர்ட் டைரக்டர் பிரபாகரோடு முதல் படம் செய்கிறார் இயக்குநர் சரண். 'பில்லா' திரைப்படத்தில் அசோசியேட் கேமராமேனாகப் பணிபுரிந்த 'பிரசாந்த் டி மிசாலி'யை தன் 'அசல்' படத்துக்கு ஒளிப்பதிவு செய்ய சிபாரிசு செய்துள்ளார்.

படத்தில் இரண்டு ஹீரோயின்கள். பிரபுவும் நடிக்கிறார். அஜித்துக்கு சிவாஜி புரொடக்ஷன்ஸில் நடிப்பது மைல்கல்லாக இருக்குமாம்.

'அசல்' படத்துக்காக இன்டர்நேஷனல் மியூசிஷியன்களை தனக்குக் கீழ் வைத்துக்கொண்டு இசையமைத்துள்ளார் பரத்வாஜ்.

இயக்குநர் சரணுக்கு 'அஜித்' நடிப்பில் இது நாலாவது படம். ''எந்த மாதிரியும், இல்லாத புதுமாதிரியான அஜித் படமாக இது இருக்கும்'' என்கிறார்.

- கிராபியென் ப்ளாக்



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன், பா.கோபால்
தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல் : 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



கோவை மாவட்டச் செய்திகள் :
கதிர்பாரதி, ப்ரியன்

தேர்தல் சூறாவளி சுற்றுப் பயணத்தில் இருக்கிறார் டாக்டர் ராமதாஸ். ''பா.ம.க. தொகுதிகள் தவிர தமிழகம் முழுக்கச் சுற்றி எங்கள் அணியின் வெற்றிக்காக பிரசாரம் செய்வேன்'' என்றவரிடம் மேலும் சில கேள்விகளை வைத்தோம்.

**தி.மு.க. உங்களுடன் கூட்டணிக்கு முயன்றதா?**

''ஒரு தோழமைக் கட்சி என்ற அடிப்படையில் ஆட்சியை நாங்கள் விமர்சித்தோம். ஆனால் தி.மு.க. தலைமை அதை விரும்பவில்லை. குரு பேச்சை ஒரு

## டாக்டர் ராமதாஸ் அதிரடி!

# அ.தி.மு.க. - இயற்கை

காரணமாக வைத்து எங்களைக் கூட்டணியிலிருந்து விலக்கினார்கள். ஆனால் தேர்தல் நெருங்க நெருங்க அவர்களுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. எப்படியாவது எங்களைக் கூட்டணிக்குள் வளைத்துப் போட முயன்றார்கள்.''

**தி.மு.க.வுக்கு 'நோ' சொன்னது ஏன்?**

''தி.மு.க., அ.தி.மு.க. என இரு கட்சியுடனும் கூட்டணி வைத்திருக்கிறோம். எங்கள் தொண்டர்கள் கணிப்பில் பார்த்தால், அ.தி.மு.க. கூட்டணி இயற்கையான கூட்டணி. தி.மு.க. கூட்டணி செயற்கை கூட்டணி. தி.மு.க.வோடு இருந்த காலங்களில் தி.மு.க. பிரமுகர்கள் எங்களுக்குச் சரிவை ஏற்படுத்தும் வகையில் நடத்திய 'உள்ளடி' நடவடிக்கைகள் பற்றி பெரிய புத்தகம் போடலாம்.''

**அ.தி.மு.க.வோடு கூட்டணி முன்பே முடிவு செய்யப்பட்டு விட்டது என்கிறாரே கருணாநிதி?**

''தவறான கருத்து. தொண்டர்கள் தி.மு.க.வின் மேல் கடுப்பில் இருக்கிறார்கள் என்பது எனக்கு ஏற்கெனவே தெரியும். ஒரு தலைவன் அதைக்கூட புரிந்து கொள்ளாவிட்டால் எப்படி? எனவேதான் பொதுக்குழு முடிந்தபின் அறிக்கை வெளியிட முடிந்தது. இந்த விஷயத்தில் அன்புமணிக்கும் எனக்கும் கருத்து வேறுபாடு என்றெல்லாம் கிளப்பி விட்டது கருணாநிதியின் உளவுத்துறை தான். அது சரி. அனைத்துக் கட்சிக் கூட்டங்கள் நடக்கும்போது, கருணாநிதி முன்னரே தீர்மானம் எழுதிக் கொண்டு வந்து விடுவாரே... அது சரியான அணுகுமுறையா?''

**பிரசாரம் எப்படி?**

''இலங்கைத் தமிழர் விவகாரம்தான் முக்கியப் பிரச்னையாக விவாதிக்கப்படும். இதில் தி.மு.க. அரசின் கபட நாடகத்தை அம்பலப்படுத்துவோம். தவிர, விலைவாசி, மணல்கொள்ளை, சிமெண்ட் விலையுயர்வு, தமிழ்நாட்டின் உரிமைகளைக் காக்கத் தவறிய கருணாநிதியின் செயல்பாடுகள் என்று தி.மு.க. அரசைப் பற்றி எங்கள் விமர்சனம் கடுமையாக இருக்கும். அது தவிர, தி.மு.க. ஆட்சியில் கலைஞரைத் தவிர எத்தனை பேர் அவர் குடும்பத்தில்

மத்தியில் ஆட்சியைத் தீர்மானிக்கின்றன. எனவே, இந்த நிலையில் மாநில அரசின் செயல்பாடுகளைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியாது.''

**பாண்டிச்சேரியில் காங்கிரஸை எதிர்த்து நிற்கிறீர்கள். அங்கு என்ன பேசுவீர்கள்?**

''காங்கிரஸ் அரசு ஈழப் பிரச்னையில் எப்படி தமிழர்களைக் குப்புறத்தள்ளிவிட்டது என்பதை விளக்குவோம். அதுதவிர, மத்திய அமைச்சரவையில் அன்புமணியும், வேலுவும் செய்த சாதனைகளை எடுத்து வைப்போம்.''

**மத்திய அமைச்சரவையில் பங்குபெற்றதால் நீங்கள் ஈழப் பிரச்னையில் காங்கிரஸை விமர்சிப்பது சரியல்ல என்று**

# தி.மு.க. - செயற்கை



முதல்வராக இருக்கிறார்கள் என்பதையும், அதனால் ஏற்படும் நிர்வாகக் குழப்பம், குளறுபடிகள், முறைகேடுகள் ஆகியவற்றையும் பட்டியலிடுவோம்.''

**இது பாராளுமன்றத் தேர்தல். மத்திய அரசில் பங்குவகித்த நீங்கள் தேசிய அளவில் அல்லவா பிரச்னைகளைப் பேச வேண்டும்?**

''தேசியக் கட்சிகள் பலவீனமாகி மாநிலக் கட்சிகள் வலுப்பெற்றிருக்கும் காலம் இது. மாநிலக் கட்சிகளே

சொல்லப்படுகிறதே?

''ஈழப் பிரச்னையில், காங்கிரஸ் தக்க நடவடிக்கை எடுக்கவில்லை என்ற ஏமாற்றத்தைத் தவிர வேறு எந்தக் குறை பாடும் இல்லை. ஆனால், தமிழ்நாட்டில் தி.மு.க. தலைவர் கருணாநிதி, கூட்டணியின் பலம்மிக்க பங்குதாரர். எங்கள் எல்லோரின் சார்பாக அவர் இந்த விஷயத்தில் மத்திய அரசுடன் போராட முன்வந்திருந்தால் நாங்கள் அதற்கு ஆதரவு தந்திருப்போம். ஆனால் தன் சுயநலத்துக்காக தமிழர்களைக் கைவிட்டார் கருணாநிதி. ஈழ விவகாரத்தில் மத்திய அரசுக்கு நாங்கள் எடுத்து வைத்த கோரிக்கைகளை சோனியா அறிவார். இந்த விஷயத்தில் நெருக்கடி கொடுத்ததும் கூட, எங்களைக் கூட்டணியில் இருந்து வெளியேற்ற ஒரு காரணம்.''



**"காங்கிரஸ் மீது, ஈழப் பிரச்னையில் தக்க நடவடிக்கை எடுக்கவில்லை என்பதைத் தவிர வேறெந்தக் குறையும் இல்லை"**

**சிதம்பரத்தில் திருமாவை எதிர்த்துப் பிரசாரம் எப்படி?**

''தனிப்பட்ட நட்பு வேறு. அது தேர்தலுக்குப் பின்பும் தொடரும். மற்றபடி களத்தில் எதிரியாக நிற்கிறார் அவர். இந்தப் போட்டியில் நட்புக்கோ, பாசத்துக்கோ, அன்புக்கோ இடமில்லை. பா.ம.க.வே அங்கும் வெற்றி பெறும்.''

**மதுபானம், புகையிலைக்கெதிராக பா.ம.க. பிரசாரம் செய்வதால் அந்த லாபியும் உங்களுக்குச் சவால் விடுகிறதாமே?**

''உலகம் முழுக்க மதுபான மற்றும் புகையிலை தொழில்கள் நடத்துவோர், எங்களைப் போன்றோருக்கு எதிராகச் செயல்படுவது வாடிக்கைதான். ஆனால் நாங்கள் இதைத் துச்சமென மதித்து எங்கள் பயணத்தைத் தொடர்வோம்.''

**2001-ல் நீங்கள் ஜெயலலிதாவைப் பற்றி வைத்த கடுமையான விமர்சனங்களை தி.மு.க. ரீப்ளே செய்கிறதே?**

''கருணாநிதி காங்கிரஸைப் பற்றியும், காமராசரைப் பற்றியும் சொன்ன கடுஞ்சொற்களை எடுத்து வைப்பதற்கு எவ்வளவு நேரம் ஆகும். தேர்தலுக்குப் பின்னர் காங்கிரஸின் காலை கருணாநிதி வாரிவிடுவார்.''

**விஜயகாந்த் தனித்து நிற்பதால் உங்கள் அணி வோட்டுக்கள் பிரியுமா?**

''சிலரைப் பற்றி நான் பேசுவதில்லை. எங்கள் அணி நாற்பது இடங்களிலும் ஜெயிக்கும்.''

**- ப்ரியன்**

**வெ**ற்றி பெற்ற படத்தை, விருப்ப மான நபரை தராசு தட்டில் வைத்து கறுப்புத் துணியில் கண்ணைக் கட்டிக் கொண்டு எடைபோட வேண்டும். 'அயன்' படத்தை அந்தப் பரீட்சைக்கு உட் படுத்தினால்...

★ 'அப்படி போடு போடு கண்ணாலே
இப்படி போடு போடு கையாலே'

- என்று மனசு, கண்(கேமிரா)களுக்கும் கை(எடிட்டிங் சிசர்)களுக்கும் சபாஷ் போட வைக்கிறது!

★ பொங்கி வழிந்த பால் பாத்திரமாய் 'பளபளக்கிற பகலா நீ' பாடல் மட்டும் நெஞ்சில் தங்கிவிட, மற்றவை எல்லாம் நுரைத்து வழிந்து 'ஏக்க' அடுப்பை அணைந்து போக வைக்கின்றன. ஹாரிஸ் ஜெயராஜுக்கு ஃபிப்ஃடி பர்சன்ட்தான்!

★ டெக்னிகல் மாய்மாலங்கள் செய்கிற கதையில், ஓட்டைகள் நிறைய. அவை சராசரி ரசிகனுக்குத் தென்படாத வண்ணம் கே.வி.ஆனந்த் இயக்கியிருப்பதை சாமர்த்தியம் என்பதா? சதி என்பதா?

★ நிழல் உலக நண்பனாக வரும் புது வரவு ஜகன், அசத்தலான வெல்கம் டிக்கெட் வாங்கி இருக்கிறார். கொடுத்த வேலையை சூர்யா சின்ஸியராகச் செய்திருக்கிறார்!

★ தமன்னா, சாவி கொடுக்கப்பட்ட பார்பி பொம்மை. ரேணுகாவும் (சூர்யாவின் அம்மா), பிரபுவும் (சூர்யாவின் 'பாஸ்') நடிப்புத் தெறிப்புகளில் ஜொலிக்கிறார்கள்.

★ காமெராவின் சாதுர்யமும் உழைப்பும் அழகை மட்டுமின்றி கொடுமையையும் படம்பிடிக்க எவ்வளவு தூரம் பயன் படுத்தப்படலாம் என்பது குறித்து இப் படத்தில் யாருமே யோசிக்காததால், வன்முறையின் உச்சம் எட்டப்பட்டிருக்கிறது.

★ ''வைரம்தானே கடத்தறார் ஹீரோ, கஞ்சா கடத்தலியே!'' என்கிற பதிவை சூர்யா மூலம் இளைய சமுதாயத்திடையே உலவ விட்டுள்ளனர்.

★ தமிழ் சினிமாவின் சகல ஓபியம் சமாசாரங்களையும் அதிநவீன தொழில் நுட்ப பாக்கேஜிங்கில் பரிமாறுவதால்; கடத்தல்காரர்களின் நிழல் உலக (அ)நியாயங்கள், நிஜ உலகின் நியாயங்கள் போன்று மாயத் தோற்றம் கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளது.

# அயன்

★ 'கமர்ஷியல் டைரக்டராக முத்திரை குத்தாதீர்' என அறிக்கை விடும் ஆனந்த் ஸார்! வைக்கோல் கன்றுக்குப் பதில் டிஜிட்டல் கன்று வைத்திருக்கிறீர்கள்!

**- கல்கி விமர்சனக் குழு**



● **கஜபதி உளுந்தூர்பேட்டை**

***கிரேஸி, சிறந்த 'BODY-SPRAY' எது....?***

'உசிரு'. இந்தப் பூர்வவாசனை திரவியம் போச்சுன்னா BODY பொண கப்படிக்கும்.

● **வஸந்தா ராஜகோபாலன், தாம்பரம்**

***நாட்கள் வெகுவேகமாக ஓடுகின்றனவே... அதைத் தடுக்க என்ன வழி?***

ஓடுவது நாட்கள் அல்ல; அதன் பின் ஓடும் ஆட்கள். நாட்கள் ஒரு மனபிராந்தி. நாட்களில் உள்ள கள்ளை(பயபிராந்தி) எடுத்துவிட்டால் அது Not (இல்லை) என்றாகிவிடும். கள் இருந்தால் அது Naughty ஆகிவிடும். ஓடும் நாட்கள் நாயைப் போல நம்மைத் துரத்தும். நாம் அமைதியாக நின்றால் அது வாலைக் குழைத்துக்கொண்டு நம் பின் வரும்.

● **கலைச்செல்வி, திருநெல்வேலி**

***'மாக்கோலம்', 'ஸ்டிக்கர் கோலம்' எது பெஸ்ட்...?***

'ஸ்டிக்கர் கோலத்தை' பூலான் தேவி மாதிரி 'கோலான் தேவி' திருட வாய்ப்புண்டு. குனிந்து வளைந்து ' மாக்கோலம்' போட்டால் உடம்புக்கு ஆரோக்கியம்; எறும்புக்கு ஆகாரம்.



# மூக்குப்பொடி Vs

● **மா.உலகநாதன், திருநீலக்குடி**

***ஐந்து விரல்கள் இருக்க அது என்ன கட்டை விரலை மட்டும் கைரேகைக்கு வைக்கச் சொல்லும் சட்டம்?***

'Thumb-Rule - ஏகலைவன் ஞாபகார்த்தமாக.

● **ரா.பிரசன்னா, மதுரை**

***நாயோட 'லொள்ளுக்கும்', நம்மோட 'லொள்ளுக்கும்' என்ன வித்தியாசம்....?***

'லொள்ளற' நாய் அதாவது குரைக்கிற நாய் கடிக்காது. நாயோட 'லொள் லொள்' இரட்டைக் கிளவி. நம்மோட 'லொள்ளு' ஒத்தைக் கிளவன்.

● **மதுரை முருகேசன், மானம்புச்சாவடி**

***முழித்துக்கொண்டிருக்கும் இரவுதான் 'முதல்இரவு' என்று சொன்னீங்க. அப்போ சிவராத்திரி?***

'முழுமுதல்' இரவு....

● **கல்யாண், ஊட்டி**

***காமம் இல்லாமல் இனப் பெருக்கம் நடக்க முடியுமா?***

சம்பந்தப்பட்ட பூவுக்கும் , வண்டுக்கும் தெரியாமலேயே மகரந்தச் சேர்க்கையால் நடக்கும் இனப் பெருக்கம். மனித வர்க்கத்தில், டெஸ்ட்-ட்யூப் பேபி. இதுவும் புதிதல்ல. குட முனி என்று அழைக்கப்பட்ட அகத்தியர்தான் முதல் டெஸ்ட்-ட்யூப் பேபி.

● **V.ஆனந்த கிருஷ்ணன், அண்ணா நகர்**

***பணம் பத்தும் செய்யும் என்கிறார்களே. அந்த பத்தில் பஞ்சமா பாதகங்களும் அடக்கம்தானே?***

சாதாரணமாகவே பஞ்சமாபாதகங்கள் செய்பவன், பணம் வந்தால் இரண்டு மடங்கு, பத்துமா-பாதகங்கள் செய்வான்!




● மாலினி, பெங்களூர்

**புத்திசாலி முட்டாளாவது எப்போது....?**

புத்தி ஜோலியாக இல்லாமல், புத்தி ஜாலியாகும்போது.

● பீ.சேகர், ஊட்டி

**டியர் கிரேஸி பொடியில் தங்களுக்குப் பிடித்தது 'மூக்குப் பொடியா', இல்லை 'சொக்குப் பொடியா'....?**

வைணவத் தலங்களுக்குச் செல்லும்போது மூக்குக்கு மேல் இட்டுக்கொள்ளும் ஸ்ரீசூர்ணப் பொடி. சைவக் கோயில்களுக்குச் செல்கையில் மதுரை சொக்கநாதரை வேண்டிக்கொண்டு நெற்றியில் இடும் விபூதி சொக்குப் பொடி.

# சொக்குப்பொடி!

● வீரபத்திரன், கோவில்பட்டி

**மனைவியை ஏன் தாரம் என்கிறோம்....?**

தாரை வார்த்துக் கொடுப்பதால் தாரம். குடும்பத்துக்கு அஸ்திவாரமாக இருந்தால் அவள் ஆதாரம், செலவு வைத்தால் அவள் சேதாரம்.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**ஸம்மரைச் சமாளிக்க 'ஜில்லுனு' ஒரு வழி...?**

முடிந்தால் 'ஃபிரிட்ஜுக்குள்' அமர்ந்துகொள்ளுங்கள். முடியாவிட்டால் யார் 'ஐஸ்' வைத்தாலும் ஏமாறாமல் ஏற்றுக்கொள்ளுங்கள்!

○

# இனியும் டூயட் பாடுவேன்

**–'லக லக' சத்யராஜ்**

**கோ**வை மாவட்டச் சிறப்பிதழுக்காக சத்யராஜ் வீட்டைத் தட்டியபோது, ''அட உள்ள வாங்கண்ணா!'' என்று கொங்குத் தமிழில் அன்புடன் வரவேற்றார்.

''எனக்கு கோயம்புத்தூர் அரசுக் கலைக் கல்லூரியில் அப்ளிகேஷன் வாங்கப்போன நாளே மறக்க முடியாதது. பி.யு.சி.க்கு அப்ளிகேஷன் வாங்க க்யூவில் எனக்குப் பின்னாடி மணிவண்ணன் சாரும் நின்னுட்டிருந்தாரு. நான் கலரா வெள்ளையும் சொள்ளையுமா இருக்கறதைப் பார்த்துட்டு எனக்கு நல்லா இங்கிலீஷ் தெரியும்னு நினைச்சுட்டாருபோல. சார் இந்த அப்ளிகேஷன்ல லாஜிக், ஹிஸ்டரி, அட்வான்ஸ்டு இங்கிலீஷ்ன்னு போட்டிருக்கு. அட்வான்ஸ்டு இங்கிலீஷ்னா என்னன்னு கேட்டார். நானும் எனக்குத் தெரியாததை வெளிக்காட்டிக்காம, 'அது ஒண்ணுமில்லீங்கண்ணா, அட்வான்ஸ்டு இங்கிலீஷ்ன்னா நாம இப்ப படிக்கறதைவிட கொஞ்சம் அட்வான்ஸா இருக்கும். அவ்வளவுதான்'னேன். என்னை நம்பி மணிவண்ணனும் பி.யு.சி.யில அந்த க்ரூப்ல சேர்ந்துட்டாரு. அப்புறம் ஷேக்ஸ்பியர் அது, இதுன்னு பாடத்துல வந்ததும், பேஸிக் இங்கிலீஷுக்கே ததிங்கிணத்தோம் போடற நம்ம மணிவண்ணன் சார் ஆடிப் போயிட்டார். அதுக்கப்புறம் பி.யு.சி. படிச்ச இரண்டு வருஷத்துல காலேஜ் கேம்பஸ்ல அவரை எங்கே பார்த்தாலும் நான் எஸ்கேப்.''

**கோவையைப் பற்றி கொஞ்சம்...**

''தமிழ்நாட்டில இருக்கிற எல்லாருக்கும் கோயம்புத்தூரைப் பிடிக்கும்ண்ணா. அந்த அளவுக்கு க்ளைமேட் நல்லா இருக்கும். இன்னைக்கும் சென்னையிலிருந்து கோவை பீளமேடு ஏர்போர்ட்ல இறங்கினதும் தலைவர் பாணியில புதிய வானம் புதிய பூமின்னு பாடிக்கிட்டே போவேன்னா பாத்துக்கோங்களேன். சென்னையிலேயே வளர்ந்த என் மருமகளுக்கும் கோவை ரொம்பப் பிடிக்கும்.''

**எம்.ஜி.ஆரோட தீவிர ரசிகன் நீங்க. சிகரெட், மது உபயோகிக்கிற மாதிரி நடிக்கிறீங்களே?**

''கண்ணு, திரையில எந்தவிதக் கெட்ட பழக்கமும் இல்லாம நடிக்கறதைக் கொள்கையா வைச்சிருந்து செயல்படுத்தின ஒரே நடிகர் நம்ம வாத்தியார்தான். அவருக்கு ஆளுமைத் திறன் அதிகம். நான் அடிப்படையில வில்லனா இருந்து நாயகனா வந்தவன். எல்லாவித கெட்டப்லயும் நடிக்க வேண்டியது என் கட்டாயம்.'

**உங்களை மாதிரி பெரிசுங்க விடாம டூயட் பாடறது சரியா?**

''நான் இருபத்து மூணு வருஷத்துக்கு முன்னாடியே ரஜினிக்கு அப்பாவா நடிச்சிருக்கேன். போன வருஷம் வந்த ஒன்பது ரூபாய் நோட்டு, பெரியார் படமெல்லாம் டூயட் பாடின படங்கள் இல்லை. டூயட்

டைப் பார்க்கற ரசிகர்கள் இருக்கிற வரை இதைத் தவிர்க்க முடியாது. இனியும் டூயட் பாடிட்டேதான் இருப்பேன்.''

**பெரியாருக்குப் பிறகு நடிக்க விரும்பும் வரலாற்றுக் கதாபாத்திரங்கள்?**

''ஆண்டன் பாலசிங்கம் கேரக்டர் எனக்குப் பொருந்தும்னு நண்பர்கள் சொல்றாங்க. காரல் மார்க்ஸ், நேதாஜி, சேகுவாரா போன்றவர்களின் கேரக்டர்களில் நடிக்க ஆசை.''

**சமீபத்தில் படித்ததில் பிடித்தது?**

''புலமைப்பித்தன் எழுதிய 'பூகோளமாய் பலி பீடமாய்' புத்தகம் படிச்சேன். இலங்கையின் பூகோள அமைப்பே எப்படி அந்நாட்டின் தமிழர்களுக்குப் பிரச்னையாக இருக்குங்கறதையும், அதற்கு என்ன தீர்வுங்கறதையும் ஆசிரியர் விளக்கியிருக்கார். மனத்தையும் சிந்தனையையும் தூண்டிய எழுத்து அது.''

**நீங்கள் பகுத்தறிவாளர். உங்கள் குடும்பத்தினர் எப்படி?**

''நானும் என் மகன் சிபியும் பகுத்தறிவுப் பாதையில்தான் போறோம். மனைவிக்கும், மருமகளுக்கும் கடவுள் நம்பிக்கை இருக்கு. ஆனாலும் மூடநம்பிக்கைகள் இல்லை.''

**உங்க ஃபேமஸ் டயலாக் 'என் கேரக்டரையே புரிஞ்சுக்க மாட்டேங்கறீங்களே!' உங்களோட ரியல் கேரக்டர் என்ன?**

> **“நானும் என் மகன் சிபியும் பகுத்தறிவுப் பாதையில்தான் போறோம். மனைவிக்கும், மருமகளுக்கும் கடவுள் நம்பிக்கை இருக்கு.”**

''எப்பவும் எந்தப் பிரச்னைக்கும் கலங்காம சிரிச்சுக்கிட்டே இருப்பேன். இதுதான் என்னோட ரியல் கேரக்டர்.''

– ராகவ்குமார்

படம் : காயல்சேக்



கு மாரலிங்கம் மறுபடியும் அந்தப் பழைய வஸந்த மண்டபத்தின் குறட்டில் படுத்தான்; இரண்டு கண்களையும் இறுக மூடிக் கொண்டான்.

கண்ணை மூடிக்கொண்ட பிறகு அவனுடைய செவிகள் மிகவும் கூர்மையாயின. குயில்கள் 'குக்கூ' என்று கூவும் சத்தமும், அணில்கள் 'கிச்' 'கிச்' என்று இசைக்கும் சத்தமும், வேறு பலவகைப் பறவைகள் 'கிளக்' 'கிளக்' என்றும், 'கிளிங்' 'கிளிங்' என்றும் 'கிறீச்' 'கிறீச்' என்றும் கத்தும் சத்தமும் கேட்டன. இவ்வளவு சத்தங்களுக்கு மத்தியில் 'கலின்' 'கலின்' என்று கேட்ட மெட்டிகளின் சத்தத்திலேதான் அவனுடைய கவனம் நின்றது. சீக்கிரத்தில் அந்தச் சத்தம் நின்று விட்டது. அவ்வளவு காது கொடுத்துக் கவனமாகக் கேட்டும் கேட்கவில்லை. அந்தப் பெண் போய்விட்டாளா? - அடாடா! போயே போய்விட்டாளா? அவள் தலையிலே இருந்த கூடையில் மோரோ, தயிரோ அல்லது சோறோ இருந்திருக்க வேண்டும். வயிற்றுப்பசி கொல்லுகிறதே; வந்தது வரட்டும் என்று

# "மோகினிப் பிசாசு உலாவுது!"



அவளைப் பார்த்துப் பேசாமல் போனோமே? - நிஜமாகவே போய்விட்டாளா? அல்லது, ஒருவேளை...

குமாரலிங்கம் இலேசாகக் கண்ணிமைகளைச் சிறிது திறந்து பார்த்தான். அந்தப் பெண் போகவில்லை. தன் எதிரிலே அருகில் நின்று கொண்டிருக்கிறாள் என்று தெரிந்து கொண்டான். உடனே தன்னை மீறிவந்த சங்கோசத்தினால் மீண்டும் கண்களை இறுக மூடிக்கொண்டான்.

## வண்ணத்தூரிகை

குன்றிலிருந்து குதித்தோடும் அருவியின் சலசல சத்தத்தைப் போன்ற சிரிப்பின் ஒலி அவனுக்குக் கேட்டது.

அந்த ஒலி செவியில் விழுந்ததும், ஸ்விட்சை அமுக்கியதும் இயங்கும் மின்சார இயந்திரத்தைப் போல் குமாரலிங்கம் பளிச்சென்று எழுந்து உட்கார்ந்தான். தன் முன்னால் நின்ற பெண்ணின் முகத்தை ஏறிட்டு உற்றுப் பார்த்தான். ஆச்சரியம் எல்லை மீறியது. அவள்தான்; சந்தேகமில்லை! சோலைமலை இளவரசியேதான். உடுத்தியிருந்த உடையிலும் அணிந்திருந்த ஆபரணங்களிலும் தான் வித்தியாசமே தவிர, முகத்திலும் தோற்றத்திலும் யாதொரு வேற்றுமை

## அமரர் கல்கி

யும் இல்லை.

குமாரலிங்கத்தின் தலை சுழன்றது.

நல்லவேளையாக, அந்தப் பெண் அடுத்தாற்போல் சொன்ன வார்த்தை அவன் மயங்கிக் கீழே விழாமல் தடுத்தது.

''இந்த மண்டபத்தில் உச்சிவேளையில் படுத்துத் தூங்கக் கூடாது, ஐயா! இங்கே மோகினிப் பிசாசு உலாவுது என்று எல்லாரும் சொல்கிறாங்க!''

இதைக் கேட்டதும் குமாரலிங்கம் குபீர் என்று சிரித்தான்.

**(அமரர் கல்கியின் சோலைமலை இளவரசி நாவலிலிருந்து...)**



# கல்கி



2009 ஏப்ரல் 26
விரோதி சித்திரை 13
மலர் : 67
இதழ் : 39

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## பிரசார ஆயுதமாகும் இலங்கைப் பிரச்னை!

'பிரபாகரன் மீது கை வைத்தால் தமிழகத்தில் ரத்த ஆறு ஓடும்' என்று வைகோ பேசியது அரசியல் ஆதாயத்துக்குத்தான். தேசிய பாது காப்புச் சட்டத்தின் கீழ் அவர் இன்னமும் கைது செய்யப்படாமல் இருப்பதும் அரசியல் ஆதாயத்துக்குத்தான்!

"பிரபாகரனை போரஸ் போல் நடத்த வேண்டும்" என்று கருணாநிதி சொன்னதும், "இந்த போரஸை எந்த அம்பி காட்டிக் கொடுப்பார்?" என்று தா.பாண்டியன் கேட்டதும், "தி.மு.க.வுடன் கூட்டணி. ஆனால் காங்கிரஸுக்கு வோட்டு கேட்க மாட்டேன்" என திருமாவளவன் இரட்டை வேடம் போடுவது... எல்லாமே தேர்தல் கால குறுகிய அரசியல் ஆதா யத்துக்குத்தான்!

இலங்கைப் பிரச்னையை தேர்தல் பிரசார ஆயுதமாகப் பல்வேறு தமிழகத் தலைவர்களும் மாற்றிமாற்றிப் பயன்படுத்தி வருவது அருவருக்கத்தக்கது.

இலங்கையில் தமிழர்கள் படுகொலை ஆவதை யாருமே விரும்ப வில்லை - பிரபாகரன் நீங்கலாக! அப்பாவித் தமிழர்களைக் கேடயமாக்கித் தன் உயிரைப் பாதுகாத்துக் கொள்ளத் துணியும் ஒரு தலைவன், தமிழர் நல விரும்பியாக எவ்வாறு இருக்க முடியும்?

இத்தகைய சுயநலத் தலைவனை, வைகோ வெளிப்படையாக ஆதரிப்பதால், தாங்களும் ஆதரிக்க வேண்டும்; குறைந்தபட்சம், எதிர்க் காமலாவது இருக்க வேண்டும் என்று பல்வேறு தமிழக அரசியல் தலைவர்கள் கருதுகிறார்கள். வைகோவை எதிர்த்துப் பேசினாலோ, நடவடிக்கை எடுத்தாலோ, வாக்கு வங்கி பாதிக்கப்படும் என்றும் நம்பு கிறார்கள். தமிழீழ விடுதலைக்கு ஆதரவாகப் பேசுவதன் மூலம் அரசியல் ஆதாயம் கிட்டும் என்றும் நினைக்கிறார்கள்.

தமிழக மக்களுக்கு இலங்கைத் தமிழர் நலனில் அக்கறை, அனுதாபம் நிறையவே உண்டு என்றாலும், அதன் அடிப்படையில் தங்கள் வாக்குப்பதிவை அவர்கள் நிச்சயமாகத் தீர்மானிக்கப் போவதில்லை. இது தமிழக அரசியல்வாதிகளுக்குத் தெரியாத விஷயமல்ல. ஆனால், அவர்கள் தொடர்ந்து இலங்கைத் தமிழர் பிரச்னை மூலம் ஆதாயம் தேடிய வண்ணம்தான் இருக்கிறார்கள். பல சமயங்களில், வேறு முக்கிய உள்நாட்டுப் பிரச்னைகளிலிருந்து மக்களைத் திசைதிருப்பவே இந்தத் 'தமிழர் நல' சென்டிமென்ட் ஆயுதத்தை அவர்கள் கையிலெடுப்பதாகத் தோன்றுகிறது.

தேர்தல் அறிவிக்கப்பட்டதுமே ஜெயலலிதா ஈழத் தமிழர்களுக்காக உண்ணாவிரதம் மேற்கொண்டார்.

இலங்கை அரசுக்கு நாம் அறிவுரை கூற முடியாது என்ற நிலைப்பாட்டில் உறுதியாக இருந்தது மத்திய அரசு. ஆனால், சமீபத்தில் இலங்கை அரசு இரண்டு நாள் தற்காலிகப் போர் நிறுத்தம் அறிவித்தபோது, நீண்ட நாட்களாகவே மத்திய அரசு ராஜபட்சயவிடம் போர் நிறுத்தம் செய்ய வலியுறுத்தி வந்ததாக அறிக்கை வெளியிட்டார் ப.சிதம்பரம்! உண்மையில், இந்திய அரசின் வற்புறுத்தலால் இரு நாள், தற்காலிக போர் நிறுத்தம் அறிவிக்கப்படவில்லை. சர்வதேச அழுத்தம், ஐ.நா. சபையின் வேண்டுகோள்தான் காரணம். விடுதலைப் புலிகளோ, அந்த இரண்டு நாட்களிலும் பிணைக் கைதிகளை விடுவிப்பதற்குப் பதிலாக, புதிய தாக்குதல்கள்தான் நடத்தினர்!

விடுதலைப் புலிகள் தங்கள் பிரிவினைக் கோரிக்கையைக் கைவிடாத வரையில், இலங்கைப் பிரச்னை முடிவுக்கு வராது. அவர்கள் ஆயுதங்களைத் துறந்து, இலங்கையின் இறையாண்மைக்குப் பணிந்தால்தான் ஈழத் தமிழரின் உரிமைகளுக்கு இந்தியா பலமாகக் குரல்கொடுக்க முடியும். ●

# தேர்தல் களம்


2009 தேர்தல்
என்ன ஆனாலும் காங்கிரஸ் தி.மு.க வைக் கைவிடாது


நான் அலெக்ஸாண்டர்தான்னு தீர்மானமா தெரியுது... நீ போரஸ்ஸான்றதுதான் சந்தேகம்.


மதவாத சக்திகள்
காங்கிரஸ் கிழட்டு கட்சி இல்லை.. பொம்மை கட்சிதான்


இது எலக்‌ஷன் சீட்டு;
பிறகு வேற சீட்டு பரிமாறுவேன்

# விரஜை பாஷை!

## தமிழ்நாட்டில் சௌராஷ்டிரர் : முழுவரலாறு

***ஆசிரியர்: கே.ஆர்.சேதுராமன், பதிப்பாளர்: திருமதி கே.எஸ்.மீரா, ராஜ்ப்ரபா அபார்ட்மெண்ட், புதிய எண்:138, பழைய எண் : 61D, வன்னியர் தெரு, சூளைமேடு, சென்னை - 600 094. விலை ரூ.300/-***

சௌராஷ்டிரர்கள் யார் என்று ஒரு கேள்வியை எழுப்பிக் கொண்டு படிக்க ஆரம்பித்தால், பக்கம் பக்கமாக ஏராளமான செய்திகள். ஜோதிர்லிங்கத் தலமான சோம நாதபுரத்தின் பெருமை; கஜினியால் ஏற் பட்ட அழிவு; சௌராஷ்டிர மக்கள் பல்வேறு இடங்களில் குடியேறியது; அவர்களின் பட்டு நெசவுத் திறன், போர் வல்லமை, பக்தி, மன்னர்களால் போற்றிக் கௌரவிக்கப்பட்ட பெருமை, விரஜை பாஷை என்று சொல்லப்படுவது சௌராஷ்டிர மொழிதான்; ஸ்ரீகிருஷ்ணன் பேசியதும் இந்த மொழிதான் என்கிற செய்திகள்... இப்படி வரலாறு, புராணம், இதிகாசம் என்று நீண்ட நெடிய ஆராய்ச்சித் தொகுப்பாக அமைந்தி ருக்கிறது இந்த நூல்! கல்வெட்டுகள், கலை, இலக்கியம் என்று ஆதார பூர்வமாகவும், சௌராஷ் டிர மக்களின் பண்பாடு, மொழி, அரசியல், சமூக வாழ்வு, பொருளாதார நிலை... என்று தனித்தனி தலைப்புகளில் விவரித் திருக்கிறார் ஆசிரியர். மூன்றாம் பதிப்பாக வெளி வந்திருக்கிறது இந்த நூல் என்பதே, ஆசிரியரின் தேடலுக்கும், ஆய்வுக்கும் இந்த நூலின் உள்ளடக்கத் துக்கும் கிடைத்துள்ள மிகப்பெரிய சிறப்பு! படித்தறிய வேண்டிய செய்திகளின் தொகுப்பு!

## திருவடி தரிசனம்

***ஆசிரியர்:பி.சுவாமிநாதன், வெளியீடு: விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 600 002. விலை ரூ.90/-***

ஞானம் யாருக்கு எப்போது வாய்க்கும் என்பதுதான் சிருஷ்டியின் ரகசியம். அதனால்தான், ஞானிகளின் தோற்றமும், செயல்களும் ஆச்சர்யம் அளிக்கின்றன. ஸ்ரீ சங்கரர், சதாசிவப் பிரம்மேந்திரர், சங்கீத மும்மூர்த்திகள், நாம ஜபத்தை பிரசாரம் செய்த பகவந் நாம போதேந்திரர், ஸ்ரீதர ஐயாவாள்... உட்பட பதினைந்து மகான் களின் வாழ்க்கை, அவர்கள் நிகழ்த்திய அற்புதம் மற்றும் பக்தர்களின் அனுபவம் என்று விவரிக்கிறது இந்த நூல். சரளமான நடையும், சுவாரஸ்யமான செய்திகளும் புகைப்படங்களும் புத்தகத்துக்கு மெருகு கூட்டுகின்றன.

**- ராகவன்**

# சத்தியம்!

சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவது மட்டுமல்ல. நல்ல மனசிலே தோன்றுகின்ற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம் என்பதாக, சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்:

'ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்'

பேச்சினாலும் காரியத்தினாலும் எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மை உண்டாக்குவதே சத்தியம்: கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக்கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக்கூட கடுமையாகச் சொன்னால், அதை யாரும் ஏற்க மாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப்போகிற நல்லவாக்குச் சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும்: அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ, அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்படவேண்டும். இதுவே சத்தியம்.

'சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாகச் சொல்லமுடியவில்லை என்றால், அப்போது அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமாயிருந்தாலும், அசத்தியத்தைச் சொல்லாதே' என்பது பெரியோர் வாக்கு.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்



# 70 முதல் 7 வரை–||

## கல்கி ராஜேந்திரன்

ஒரு கிரகப்பிரவேசத்துக்குப் போயிருந்த போது சின்னஞ்சிறு பாலகன் ஒருவன், பஞ்ச கச்சம் கட்டிக்கொண்டு இங்கும் அங்கும் ஓடி மகிழ்வதைப் பார்த்தேன். ''அட, இந்த வாண்டுப் பயல் எத்தனை அழகா பஞ்சகச்சம் கட்டியிருக்கான், பாரு'' என்று மனைவியிடம் சொன்னேன்.

''அதெல்லாம் இப்ப ரெடிமேட்ல வந் தாச்சு; நிமிஷமா மாட்டிவிட்டு, இழுத்து முடிஞ்சுடுவா'' என்றாள் விஜயா.

# நட்பு நலம்–
# இலக்கிய நயம்!

எனக்கு இந்தச் செய்தி ஆச்சர்யமளிக்க வில்லை. ஏனெனில் பல ஆண்டுகளுக்கு முன்பே, ராஜாஜி ரெடிமேட் பஞ்சகச்சத்துக்குப் பிள்ளையார் சுழி போட்டது எனக்குத் தெரியும்.

கென்னடியைச் சந்திக்க ராஜாஜி அமெரிக்கா சென்றார் அல்லவா? அயல்நாட்டுப் பயணத் திலும் கதர் வேஷ்டிதான், பஞ்சகச்சம்தான் உடுத்துவார் என்பதை சதாசிவம் உணர்ந்தி ருந்தார். அங்கே குளிர் அதிகமாயிற்றே, எப் படிச் சமாளிப்பார் என்று கவலைப்பட்டார். ராஜாஜியிடம் இது பற்றிப் பேசினார். இருவரில் யாருடைய ஐடியா என்பது தெரி யாது; அடுத்த நாள் டெய்லர் முனுசாமி வர வழைக்கப்பட்டார். அவருக்கு பஞ்சகச்சம் என்றால் என்ன; எப்படிக் கட்டுவது என்று விளக்கம் அளிக்கப்பட்டது. முனுசாமி ராஜாஜியை அணுகி அளவெடுத்துக் கொண் டார். உயர்ரக கதர்த் துணியும் வெள்ளை

* திரு. சதாசிவம்



நிறத்தில் மெலிதான கம்பளித் துணியும் வாங்கி வரப்பட்டன. உள்ளுக்குள் 'உல்லன் லைனிங்' கொடுத்து, ராஜாஜிக்கு ரெடிமேட் பஞ்சகச்ச டிரெஸ் தைத்துக் கொடுத்தார் முனுசாமி!

உண்மையில், 'இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டிருக்க வேண்டாமோ' என்றுதான் பின்னால் ராஜாஜி கூறிய சில வார்த்தைகள் என்னை எண்ண வைத்தன. ''அமெரிக்காவில் எல்லாமே ஏர்-கண்டிஷன் செய்யப்பட்டதுதான். வீடு, கார், ஏன் லிஃப்ட் கூட! அதனால் அங்கே என்ன சீதோஷ்ணநிலை என்பதே தெரிய வில்லை'' என்றார் ராஜாஜி. அவர் என்ன, ஊர் சுற்றிப் பார்க்கவா போனார்? சென்றார்; கென்னடியைப் பார்த்தார்; அவர் உள்ளத்தை வென்றார்; திரும்பி வந்துவிட்டார். அமெரிக் காவின் சீதோஷ்ணநிலை அவரைப் பாதிக்கா ததில் வியப்பில்லை.

உலக நலன் கருதி அணு ஆயுத சோதனை கள் நிறுத்தப்பட வேண்டும்; அணு ஆயுத உற்பத்தியும் குவிப்பும் தவிர்க்கப்படவேண்டும் என்பதுதான் ராஜாஜியின் பயண நோக்கம். அதற்கான வாதங்களை அவர் முன் வைத்த

**“பல ஆண்டுகளுக்கு முன்பே ராஜாஜி, ரெடிமேட் பஞ்சகச்சத்துக்கு பிள்ளையார் சுழி போட்டார்!”**

போதுதான், ''என்னைப் பண்படுத்திய சக்தி களுள் மிக முக்கியமான ஒருவர்'' என்று ராஜாஜி குறித்து மனம் நெகிழ்ந்து சொன்னார் கென்னடி.

இந்தப் பேச்சுவார்த்தைகளின் பின்விளைவு குறித்து நிருபர்கள் ராஜாஜியிடம் கேட்டபோது, 'flowerful' என்ற சொல்லைப் புதிதாக உரு வாக்கிப் புரியவைத்தார் ராஜாஜி. 'fruitful' என்றால் நற்பயன் உண்டாயிற்று என்று அர்த்தம். அதற்கு முந்தைய நிலை 'flowerful' ஆகத்தானே இருக்க முடியும்? 'நற்பயன் மலர்ந்திருக்கிறது; நானா

வட்டத்தில் காயாகி கனிந்து பழம் தரும்' என்ற கருத்தை ஒரே வார்த்தையில் அடக்கினார்.

இப்படி புதிய சொற்களை உருவாக்குவது ராஜாஜிக்கு ரொம்பப் பிடித்தமான விஷயம். 1940களிலேயே, 'திண்ணை ரசாயனம்'என்ற தலைப்பில் ஒரு சிறிய தொடரை கல்கியில் எழுதினார். அதை ஒரு குட்டி புத்தகமாக பின்னால் சின்ன அண்ணாமலை வெளியிட்டார். ''கெமிஸ்ட்ரி என்கிற ரசாயன சாஸ்திரத்தை, திண்ணை சம்பாஷணையாகச் சிறிதளவு விளக்குவது இந்த நூலின் நோக்கம்'' என்று புத்தகத்தின் முன்குறிப்பாக ராஜாஜி எழுதியிருக்கிறார். அந்நூலில், ஆங்கிலத்தில் அமைந்த பல விஞ்ஞானக் கலைச் சொற்களுக்கு தமிழில் புதிய சொற்களை உருவாக்கித் தந்திருக்கிறார், ராஜாஜி.

ஆனால் ரசிகமணி டி.கே.சி.க்கு இந்தப் பணி ஏற்புடையதாக இல்லை. ஆங்கிலத்தில் உள்ள விஞ்ஞான கலைச் சொற்களை அப்படியே வைத்துக்கொண்டு தமிழாகவே கருதி ஏற்றுக் கொண்டு விடலாம் என்பது அவரது சிந்தனை. பல ஆங்கிலச் சொற்கள் வழக்கு மொழியில் தமிழாகவே மாறிவிட்டிருப்பதை அவர் சுட்டிக்காட்டுவார். இத்தனைக்கும் 'culture' என்ற ஆங்கில வார்த்தைக்கு 'பண்பாடு' என்ற தமிழ்ப் பதத்தை உருவாக்கியவரே டி.கே.சி.தான். இருப்பினும், ''ஆங்கில அகராதியை எடுத்துப் பாருங்கள். அதில் உள்ள ஏராளமான வார்த்தைகள் ஆங்கிலமே அல்ல. கிரீக், லாட்டின் போன்ற பல மொழிகளிலிருந்து சொற்களை எடுத்துக்கொண்டு, சொற்பமான ஒலி மாற்றங்களுடன் அவற்றை ஆங்கிலமாகவே செய்துவிட்டார்கள்'' என்பார்.

டி.கே.சி.யின் இந்தக் கருத்தை பிற்காலத்தில் ஏற்றுக்கொண்டார் ராஜாஜி. சுயராஜ்யாவில் எழுதும்போது, ''கலைச் சொற்களைக் கஷ்டப்பட்டு தமிழாக்கம் செய்துகொண்டிருப்பது வீண் வேலை. வகுப்புகளில் ஆங்கிலப் பாடப் புத்தகங்களை வைத்துக் கொண்டு தமிழில் விளக்கிச் சொல்லித்தர வேண்டும். அப்படி விளக்கிக் கூறும்போது ஆங்கிலத்தில் அமைந்த கலைச் சொற்கள் இலேசான ஒலி மாற்றங்களுடன் நாளடைவில் தமிழாகவே மாறிவிடும்'' என்று எழுதினார். ''இதனால் மிகப்பெரிய பயன் என்னவென்றால், எதிர்கால இந்திய விஞ்ஞானிகள் ஒருவரோடு ஒருவர் உரையாடும்போதும், அயல்நாட்டு விஞ்ஞானிகளுடன் உறவாடும்போதும் மிக எளிதாக ஒருவரையொருவர் புரிந்துகொள்ள முடியும்.''


✱ காஸா சுப்பாராவ்

இப்படி ராஜாஜி பின்னாட்களில் எழுதிய போதிலும், தமிழில் கலைச் சொற்களை உருவாக்கும் மோகம் அவரிடம் தொடர்ந்து இருந்து வந்தது. இதற்காகவே அவர் அடிக்கடி ஏ.வி.ராமன் வீட்டுக்குப் போவார். (ஏ.வி.ராமனின் மகன் வி.பி.ராமன் வழக்கறிஞராகப் பெரும் புகழ் பெற்றவர். எம்.ஜி.ஆருக்குத் தேவைப்படும்போதெல்லாம் சட்ட ஆலோசகர் அவர்தான்.) சில சந்தர்ப்பங்களில் காரோ டிரைவரோ இல்லாமல் போய்விட்டால் சதாசிவம், என்னை அழைத்து, ''இன்னிக்கு சாயங்காலம் ராஜாஜிக்கு நீ சாரத்தியம்

பண்ணிடறியா?'' என்று கேட்பார். நானும் சந்தோஷப் பெருமிதத்துடன் என்னுடைய காரை ஓட்டிக்கொண்டு போய் ராஜாஜி வீட்டு வாசலில் நிறுத்துவேன்.


* மீ.ப.சோமு

**ச**ற்று நேரம் கடற்கரைச் சாலை ஓரம், காரில் அமர்ந்தபடியே கதவைத் திறந்து வைத்து காற்றை அனுபவிப்பார். அப்புறம் ஏ.வி.ராமன் வீட்டுக்குப் போனால். கலைச் சொல்லாக்கப் பணியில் வாதப் பிரதிவாதங்கள் நடந்து அவர்களுக்குள்ளேயே ஒரு தீர்வும் கிட்டும். அல்லது மீ.ப. சோமு வீட்டுக்கு போனார் என்றால், கம்பனும் வள்ளுவரும் இளங்கோவும் ஔவையாரும் திருமூலரும் அவர்களுடைய கவிதைகளில் அவர்களே அனுபவிக்கத் தவறியிருக்கக் கூடிய நயங்களை, ராஜாஜி சோமுவுடன் சேர்ந்து ரசித்து மகிழ்வார். ஒருவேளை

## "என்னைப் பண்படுத்திய சக்திகளுள் முக்கியமானவர் ராஜாஜி" என்று மனம் நெகிழ்ந்து சொன்னார் கென்னடி!


* கென்னடி

காஸா சுப்பாராவ் வீட்டுக்குப் போனாலோ அரசியலை அலசுவது மட்டுமல்ல, நிகழ்கால அரசியலுக்கு ஷேக்ஸ்பியரின் நாடகத்தை ஒப்புநோக்குவார்கள்! ஷெல்லியும் வோர்ட்ஸ்வொர்த்தும் ராஜாஜியின் கவனத்தைப் பெற போட்டி போடுவார்கள். நான் வெளியே ஜன்னல் ஓரமாகக் கைகட்டி நின்றுகொண்டு, காதை மட்டும் அவர்கள் இருந்த பக்கம் செலுத்துவேன். அது எனக்குக் கிடைத்த பாக்கியம்.

மீ.ப.சோமு வீடு, அவர் பணியாற்றிய அகில இந்திய ரேடியோ நிலையம் அருகே ஸாந்தோமிலிருந்து பிரியும் ஒரு குறுகலான தெருவில் அமைந்திருந்தது. மாடியில் குடியிருந்தார். மாடிப்படி எனக்கே தலை சுற்றும் அளவில் சுழன்று வளைந்து உயரும். கைப்பிடி ஏதும் இல்லை. ராஜாஜி ஏறி வருவதற்கு உதவியாக ஒரு தாம்புக் கயிற்றை மேலே இருந்து தொங்கவிட்டிருந்தார் சோமு. தள்ளாத வயதில் அந்தக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு சுழல் படிக்கட்டில் ஏறிப் போவார் ராஜாஜி! ஏன்?

நட்பு, போஷித்து வளர்க்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் இலக்கியம், இதயத்தைப் பண்படுத்தும் என்பதையும் அவர் உணர்ந்திருந்ததால்தான். அவர் நட்பு பாராட்டிய விதமே ஓர் இலக்கியம்தான்!

நல்லவேளை, அந்நாட்களில் டீ.வி.யும் சீரியலும் இல்லை. டீ.வி. சீரியல் பார்த்துக் கொண்டிருக்கும்போது யாராவது வந்துவிட்டால் - 'பூஜை வேளையில் கரடி நுழைஞ்ச மாதிரி வந்துட்டாங்கய்யா' என்று மனசுக்குள் அலுத்துக்கொள்வாரும் இல்லவே இல்லை!

**(அடுத்த வாரம்: பாடலாசிரியர் 'கல்கி')**

**என்னதான் வெயிலாக இருந்தாலும், வியர்த்துக் கொட்டினாலும் ஃபேஷன் மாத்திரம் அப்படியேதான் இருக்கணும்னு நினைக்கும் ஜில் மங்கையா நீங்கள்? கூல் சம்மர் என கத்திரி வெயிலிலும் என்ஜாய் பண்ண வேண்டுமா... கீழ்வரும் சூப்பர்கூல் டிப்ஸ்களைப் பின்பற்றினாலே போதும். ஜில் ஜில் அம்மணி நீங்கதான்...**

● சம்மரில் ஃப்ரெஷ்ஷாக இருக்க வேண்டுமானால் க்ளென்சிங் கச்சிதமாக இருக்க வேண்டும். கோடை நாட்களில் கூட குளிக்கும் தண்ணீர் பாதி டெம்பரேச்சரில் இருப்பது நன்று. தண்ணீரில் பாத் சால்ட், புதினா, வெள்ளரி வில்லைகள், எலுமிச்சை ரசம்... என போட்டுக் குளித்தீர்களானால் நறுமணமும் புத்துணர்ச்சியும் கிட்டும்.

● உங்கள் ஹேண்ட் பாகில் டிஷ்யூ பேப்பர் எப்போதுமே வைத்திருங்கள். வியர்வை வழிந்தால் அழகாக பேப்பரால் ஒற்றி எடுக்கவும். தூசி, அழுக்கு, வியர்வை... என சகலமும் வைப் அவுட் ஆகிவிடும்.

● வெயிலில் டூவீலரில் போகும் பெண்கள், தலையில் பண்டானா அல்லது ஸ்கார்ஃப் அணிவது வெயிலிலிருந்தும் காப்பாற்றும் + ஃபேஷனும் லேட்டஸ்ட் அதுதான்! டூ இன் ஒன்!

● வெளியில் போவதற்கு முன்னால் முகத்தில் சன்ஸ்க்ரீன் ஞாபகமாகத் தடவவும். மாய்சரைஸர் தடவிய பிறகே



சன்ஸ்க்ரீன் போடவும்.

● ஸ்விம்மிங்பூலில் இறங்குவதற்கு முன்னால், வாஸலைனில் லாவண்டர் எஸென்ஷியல் ஆயிலில் சில துளிகள் விட்டு உடலில் நன்றாகத் தடவி விட்டு பிறகு நீச்சலடித்தால் குளோரினின் விளைவு களிலிருந்து தப்பிக்கலாம்.

● காட்டன் உடை களையே அணியவும், சின்தடிக் ஆடைகள் கோடையைக் கடுமையாக் கும்.

● நல்ல தரமுள்ள சன்க்ளாஸ், கலர் குடை இல்லாமல் வெளியில் போகாதீர்கள். தலைமுடி



# உடையழகு... நடையழகு...

# ஜிகாமணி!

வெயிலில் நிறம் மாறி கறுப்பிலிருந்து பிரௌனாகிவிடும். வறண்டு போகும். பிளவு ஏற்படும். ஸோ, அடிக்கடி தலை முடியை நன்றாக ஷாம்பூ, சீயக்காய் போட்டு வாஷ் பண்ணவும்.

● தலைமுடியை போனிடெய்ல் போட வும் அல்லது க்ளிப் போட்டு உச்சந்தலை யில் ஸ்டைல் முடிச்சு போடவும். கழுத்தில் காற்று படும்.

● வாட்டர் சும்மா பாட்டில் பாட்டிலா குடிக்கவும். (''திருமதி செல்வத்தின் போது தான் நாலு பாட்டில் ரொப்பி வச்சேன். கோலங்கள் போது காணுமே... திம்சு கட்டை...'' என அம்மாவை அலறவைக் காதீங்க. குடிச்சுட்டு திருப்பி ரொப்பி வையுங்க.)

● காஃபி, டீ, மசாலா, எண்ணெய் உணவு வகை களுக்கு டு விடவும். பழங்கள், சாலட் வகை கள், சர்பத், நீர்மோர், லஸ்ஸிக்கு 'சேத்தி' சொல்லவும். காலையில் முதலில் ஆரஞ்சு ஜூஸ் குடிக்கவும்.

● உங்கள் வார்ட் ரோபில் கண்டிப்பாக இடம் பிடிக்க வேண்டிய பட்டியல் இதோ - ஏ.லைன் ஸ்கர்ட், கேப்ரீ பான்ட், காதி காட்டன் குர்தீஸ், வொயிட் டாப்ஸ்...

● வியர்வை வழிந்துகொட்டும் என்ப தால் மேக்கப்பில் கவனம் தேவை. லிக்விட் ஐ-லைனருக்குப் பதில் வாட்டர் ப்ரூஃப் மஸ்காரா அல்லது ஐபென்சில் உபயோ கிக்கவும்.

● வெயிலினால் கருமை படிந்தால் தயிரில் வெள்ளரி ஜூஸ், மஞ்சள் பொடி கலந்து முகம் மற்றும் கழுத்தில் தடவினால் முகம் பளிச்சென்று ஷைனாகும்.

● கைகள் கறுப்பாகிவிட்டதே என ஓலமிடாமல் சன்ஃபிளவர் ஆயிலில் கொஞ்சம் எலுமிச்சை ஜூஸ், கொஞ்சம் சர்க்கரை சேர்த்துத் தடவி சிறிது நேரம் கழித்து வாஷ் பண்ணினால் கைகள் பள பளக்கும்.

- லதா சேகர்

## ப்ளாக் அண்ட் வொயிட்
### கதைகள்-2

**நா**தஸ்வரத்தில் பாரதியாரின் 'சின்னஞ்சிறு கிளியே'வை காபியில் ஆரம்பித்து இழைந்துகொண்டிருந்தார் காருக்குறிச்சி அருணாசலம்.

எத்தனை முறை கேட்டாலும் அலுக்காத கானங்களில் இதுவும் ஒன்று. என்ன மாதிரியான வாசிப்பு அது. காபிதான் என்றாலும் கொஞ்சம் ஸ்ட்ராங்கான, லேசான கசப்பில் ருசிக்கிற கும்பகோணம் டிகிரி காபி அது.

வாத்தியத்தையும் வாசிப்பையும் காதலித்து அப்படியே ஒட்டி இழையும் போதுதான், அதன் பதம் கூடி ருசி ரசனையின் மொக்குகளில் இலவம் பஞ்சு நீவலாய் வருடி, விதிர்க்க வைத்து இப்படி ஜாலங்கள் செய்யும்.

அமிர்தகடேசன் வாசிப்பை ஈஸி சேரில் அமர்ந்தபடி கேட்டுக் கரைந்து கரைந்து, அதில் திளைத்துக்கொண்டிருந்தார்.

''ஸார்... ஸார்...'' என்ற சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார் அமிர்த





கடேசன். சாரங்கபாணி முதலியாரின் பிள்ளை சம்பத், ஏதோ பேப்பரோடு வந்து நிற் கிறான்.

''என்னப்பா... சம்பத் எப்படி இருக்க...''

''நல்லா இருக்கேன் ஸார்! நீங்க எப்படி இருக்கீங்க?''

'நன்னா ஷேமமா இருக்கன். அதென்ன பேப்பர்?''

''இல்ல... நாளைக்கு பவள விழாவுல நீங்க பேசறதுக்கு மகாதேவன் ஸார் குறிப்பு குடுக்கச் சொன்னார்...

''நீங்களே படிச்சிப் பாத்துகிறீங்களா... இல்ல நான் ஒரு தடவை படிக்கச் சொல் லட்டுமா..''

''நீயே படிக்கச் சொல்லிடேன்.''

சம்பத், படிக்க ஆரம்பித்தான். அதில் என் அப்பா வங்கி தொடங்கிய தேதி, முதன்முதலாய்த் தள்ளுபடி செய்த வாராக் கடன்கள்... உட்பட எல்லா பழைய சங்கதிகளும் இருந்தன.

கடைசி பகுதியில், பேங்கின் இன்றைய அசுர வளர்ச்சி, வங்கியின் மெயின் பிரான்ஞ்சில் மட்டும் வேலை செய்யும் ஐந்நூறுக்கும் மேற்பட்ட ஊழியர் கள் வரையிலான விவரங்கள் சப் ஜாடா வாக இருந்தது.

''சரி சரி... நீ அதை அப்படி டேபிள்ள வெச்சுட்டுப் போப்பா...''

அவர் அப்பா தொடங்கிய வங்கி அது. அவருக்குப் பின், அதே வங்கியில் அமிர்த கடேசன் சேர்மன் பொறுப்பில் இருந்து பணியாற்றி ஓய்வு பெற்றார். இப்போது அவரது மகன் மகாதேவன் அதே பொறுப்பில் இருக்கிறான்.

மூன்று மாசமாய் ஓய்வு ஒழிச்சல் இல்லாமல், பவள விழா வேலை பார்க் கும் அவன், வீட்டுக்கு வரும்போதெல் லாம், நீங்க ஒரு பத்து நிமிஷமாவது பேசிடுங்கப்பா... என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

ஒரு மாசமாய் பவள விழா தொடர்பாக நடப்பதையெல்லாம் ராத்திரி வந்து பகிர்ந்துகொண்டுதான் தூங்கப் போகிறான் மகாதேவன். ஆனாலும், இந்தக் குறிப்பு அனுப்பும் விஷயத்தை நேற்றும் சொல்ல

# அடகு வைத்த ராகம்!

## ரவிசுப்ரமணியன்



வில்லை, இன்று காலையில் புறப்படும் போதும்கூட, ஏன் தன்னிடம் சொல்லவில்லை.

எனக்கு வயசாகிவிட்ட தால் எல்லா விபரமும் மறந்தி ருக்கும் என்று அனுப்பி உள் ளானா... அல்லது அப்பா இதைப் பேசினால் போதும் என்று நினைக்கிறானா? சரி, இந்தப் புள்ளிவிவரங்களைப் படிக்க நான் எதற்கு, என்று

பலவிதமாய் யோசனை ஓடிக் கொண்டிருந்தது. அவனிடம் கேட்டேவிட்டேன்.

''இந்த வயசுக்கு மேல் நான் என்னத்துக்குப்பா மேடைல ஏறிப் பேசிட்டு என்னை விட்டுடேன்.''

''ஆமா இந்த வயசுலதான் ஒவ்வொருத்தரும் மேடைல பேசவும் பதவிக்காகவும் கிடந்து அலையா அலைஞ்சிண்டிருக்கா, நீ என்னடான்னா, உங்க அப்பா ஆரம்பிச்சு, நீ சேர்மனா இருந்த பேங்குலயே, பேசுன்னா வேண்டாங்கற.''

''சரி பேசுறேன்ப்பா'' என்று விட்டார் அமிர்த கடேசன்.

முப்பது வயசு வரை இந்த அப்பாவின் பேச்செல்லாம் கேட்காமல் இருந்தவன் தான் மகாதேவனும். என்னமோ சில பிள்ளைகளுக்கு முப்பது வயசுக்கு மேல தான் அப்பனின் அருமை தெரியுமோ என்னவோ. அப்போது பிடித்துக்கொண்டவன்தான். அதில் அமிர்தகடேசனுக்குப் பெருமையும் பூரிப்பும் உண்டு.

**சு**தந்திரம் வாங்குவதற்கு முன் 1934-ல் மிக சிறிய அளவில் இந்த வங்கியை ஆரம்பித்தவர் அமிர்தகடேசனின் அப்பா வைத்தியனாதய்யர்.

அவரோடது சராசரி பிராமணன் வாழ்க்கை இல்ல. பணத்தை மட்டும் லட்சியமா வைச்சுண்டு வாழ்ந்த மனுஷன் இல்ல அவர்.

ஏழை பாழைகளோட இலவச வைத்தியத்துக்காக, அவரோட சிநேகிதர் டாக்டர் பஞ்சாட்சரத்துக்கு மாசம் பொறந்தா, தனியா ஒரு சம்பளம் குடுத்துண்டிருப்பார். கல்யாணத்துக்குன்னு யாரும் இல்லாதவா வந்து நின்னா, மாங்கல்யம், அப்பா உபயம். கேட்டா இதெல்லாம் பணம் சம்பந்தப்பட்டதில்லப்பா... மனம் சம்பந்தப்பட்டது அப்டிம்பார். அவர் மனசுக்குப் பட்டதைத் தன் போக்குல செஞ்சிண்டிருப்பார். அப்படித்தான் என்னை அவர், யார் சொல்லியும் கேட்காம, அந்தக் காலத்துலயே தமிழ் வித்வான் கோர்ஸ் பண்றதுக்கு அனுப்பிச்சார்.

தொண்ணூறு வயசு வரை, நிறை வாழ்வோடு வங்கியின் பொன்விழா கொண்டாடிவிட்டு, ஒரு கல்யாண சாவுதான் அவருக்கு. பொன்விழா அப்ப நான் கூடவேதான் இருந்தேன். ஒரு வகையில் பேங்க் வயசும் என் வயசும் ஒண்ணுதான்.

வைத்தியனாதய்யர் பேங்கா - உதயமாகி, இப்போ பரஸ்பர சகாய நிதியா பரிணாமம் அடைஞ்சுடுத்து.

சம்பத், வைத்துவிட்டுப் போன குறிப்புகள் பேன் காற்றில் ஆடிக் கொண்டிருந்தன.

**கோ**ல்டன் ஜூப்ளியின்போது அப்பா பேசிவிட்டு வந்ததும் என்னிடம் வந்து கேட்டார்.

''என்னப்பா... பேசினதைக்





''கால் டாக்ஸி - எப்படி ஓடுது..?''

''சரியா ஓட்டமில்ல! அதனால் கடை.. கடையாய் 'பால்' பாக்கெட் சப்ளை பண்ணறேன்!''

''அப்போ... 'பால்' டாக்ஸின்னு சொல்லு!''

- இல.ராஜகோபால்

கேட்டியோ? எப்படி இருந்தது? சும்மா மனசுல பட்டதைச் சொல்லு.''

''நன்னாயிருந்ததுப்பா.''

அதுக்கு மேல எனக்குச் சொல்ல தெரியலை.

ஆனா பேங்க் செலிபிரேஷன் அப்ப தான் என்ன பேசியிருக்கணும்ன்னு தன் எண்பதாவது பிறந்த நாளப்ப சொன்னார்.

ஆஹா! ஞாபகம் வந்துடுத்து. அதையே பேசிடலாமே. என்ன இப்படிப் பேசுறானேன்னுட்டு யாரும் நினைச்சா... நினைச்சுண்டு போகட்டும். அந்தக் கோணம் தான் நேக்கும் புடிச்சுருக்கு.

**எ**ல்லார்க்கும் நமஸ்காரம்.

இந்த பவள விழா கொண்டாடற நேரத்துல உங்க பேங்க்குக்கு எதை ரொம்ப பெருமைன்னு நினைக்கிறேன்ன்னு யாராச்சும் கேட்டேன்னா, நான் என்ன சொல்றது. ரொக்க கையிருப்பையா, வசூல் செய்ஞ்ச வட்டிப் பணத்தையா... இப்படி இன்னும் இந்தக் கேள்விய நீட்டிண்டே போகலாம்.

எனக்கு அதெல்லாம் பெருமை இல்லை.

வேறென்னது.

1935-ல நாதஸ்வர சக்ரவர்த்தி திருவாவடுதுறை டி.என்.ராஜரத்தினம் பிள்ளை எங்க பேங்க்ல அக்கவுண்ட் வைச்சுருந்தார். அவருக்குச் சில சலுகைகள் பண்ணிக் குடுத்தோம்!

ஒரு தடவை, அவர் தோடி ராகத்தை நம்ம பேங்குல அடகு வைச்சுட்டு 25 ரூபா பணம் வாங்கிண்டு போயிருக்கார்.



**"ஒரு தடவை திருவாடுதுறை டி.என்.ராஜரத்தினம் பிள்ளை தோடி ராகத்தை. நம்ம பேங்குல அடகு வெச்சுண்டு ரூபாய் 25 வாங்கிண்டு போயிருக்கா!"**

ராகத்தை அடகு வைச்சுட்டு ஒருத்தர் பணம் வாங்கிண்டு போக முடியுமான்னு இப்போ எல்லாரும் சிரிப்பேள்; நம்பகூட மாட்டேள். அதுக்கு என்ன அத்தாட்சின்னு கேப்பேள். நம்ம பேங்குலயே அதெல்லாம் இருக்கு. இந்தப் பவள விழா நேரத்துல யாவது அதெல்லாம் போய் எடுத்துப் பாருங்கோ.

எங்கப்பா வைத்தியநாதய்யர்கிட்ட வந்து, பிள்ளைவாள் கேட்ருக்கார். ''அண்ணா அவசரமா பணம் தேவைப் படறது. உடனடியா எங்கிட்ட ஏதும் ஈடு இல்ல. நான் உங்களண்ட தோடி ராகத்தை அடகு வைச்சுட்டு வாங்கிக்கிட்டுமான்னு கேட்ருக்கார். அவ்ளோ பெரிய மேதைக்கு ஒரு பணமுடை. முதல்ல அப்பாவுக்கு ஒண்ணும் புரியல. அப்புறம் அவர் என்ன எப்படின்னு விளக்கிச் சொன்ன பிற்பாடு பணம் குடுத்திருக்கார்.

என்னத்துக்கு ராகத்தை அடகு புடிச்சுகிட்டுப் பணம் குடுக்கணும். ஏன் இந்த பேங்கே, அவருக்குச் சும்மா குடுத்துருக்கலாமேன்னு உங்க மனசுல ஒரு கேள்வி தோணும்.

அவாள்ளம் அதைக் கௌரவமா நினைக்கமாட்டா. சும்மா குடுத்தா வாங்கிக்கவும்மாட்டா. அந்த மாதிரி குவாலிட்டீஸ்தான், அவாளெல்லாம் அந்த அளவுக்கு வித்வா கர்வியாவும் வைச்சுண்டுருந்தது.

பணத்தைத் திரும்ப அடைக்கிற வரைக்கும் தோடியை வாசிக்கறதில்லன்னு பிள்ளைவாள் எழுதி குடுத்திட்டுப் பணத்தை வாங்கிண்டு போயிட்டார்.

ராகம் அடகுல இருக்கற நேரத்துல காரைக்குடில பிள்ளைவாளுக்கு ஒரு கச்சேரி. எல்லா ராகத்தையும் பிள்ளை ஆலாபனை பண்ணி நன்னா விஸ்தாரமா வாசிச்சுண்ட்ருக்கார். அவர் விசேஷமா வாசிக்கிற தோடிக்காக எல்லாரும் காத்திண்ட்ருக்கா. அவர் வாசிக்கல. துண்டு சீட்டல்லாம் போறது மேடைக்கு தோடிய வாசிக்கச் சொல்லி. ஒரு கட்டத்துல ரசிகாள்லாம் வாய்விட்டுச் கேட்டுடறா.

அப்போத்தான் சொல்றர் அவர், தோடி ராகம் இன்ன மாரி வைத்தியனாதய்யர் பேங்குல அடகுல இருக்குன்னுட்டு. அப்புறம் என்ன ஏதுன்னு விசாரிச்சு காரைக்குடி பெரிய கருப்பன் செட்டியார், அவாளோட காரியஸ்தர் நாச்சியப்பன்னு ஒருத்தரை அனுப்ச்சி, பேங்ல பணத்தைக் கட்ட சொல்லிட்டு, ரசீது வாங்கிட்டுப் போய் பிள்ளைவாள் கிட்டக்க காமிச்ச பிறகு, மறுநாள் ராத்திரி 'தோடி'ய அவ்ளோ ஆனந்தமா ஒரு மூணு மணி நேரம் வாசிச்சருக்கார்.



இவ்வளவு சொல்லியும் இப்படியெல்லாம் நடந்துதான்னு சில பேர் என்னை ஆச்சரியமா பார்க்குறா. இது நடந்தது; உண்மை; சத்தியம்.

இதை எதுக்குச் சொல்றேன்னாக்கா, வங்கியோட இயக்கம் வெறும் வியாபார பரிவர்த்தனைகள் மட்டும் சம்பந்தப்பட்டதல்ல. அது நம்ம கலையோடும் கலாசாரத்தோடும் நன்னா புனைஞ்சுருக்கணும்.

ஒரு பேங்கோ, இல்ல இன்ஸ்டிடியூஷனோ, அது வெறும் பில்டிங்ஸ் இல்ல; மிஷின்ஸ் இல்ல. நம்ம மனுஷால்லாம் வேலை பார்க்கிற ஃபேக்ட்டரி இல்ல... வெறும் கணக்குப் புஸ்தகங்களும் கம்ப்யூட்டர்ஸ்"ம் மட்டுமில்ல.

வாழ்க்கைய உண்மையா வாழற அர்த்தமுள்ள மனுஷானையும், உசத்தியான கலைஞர்களையும் கலைகளையும் ஒரு நல்ல. இன்ஸ்டிட்யூஷன் போஷிக்கணும். இந்தப் பவளவிழாவுல என்னோட மெசேஜ் இதுதான்.

எல்லோருக்கும் என்னோட நமஸ்காரம்.''

## எம்.ஜி.ஆர். வேடத்தில் பரத்!

'ஆறுமுகம்' படத்துக்குப் பிறகு பரத் கதாநாயகனாக நடிக்கும் படம் 'தம்பி ஊருக்குப் புதுசு'. இந்தப் படத்தில் ஒரு சில சீன்களில் எம்.ஜி.ஆரின் கெட்டப்பில் பரத் நடித்திருக்கிறார் என்கிறார் படத்தின் இயக்குநர் பத்ரி. ஐந்தாம் படை, வீராப்பு படங்களை இயக்கியவர்.

''சமீபத்தில் பட்டினம்பாக்கம் மீனவக் குப்பத்தில் ஒரு பாடலைப் பதிவு செய்தோம். எம்.ஜி.ஆரின் 80 அடி கட்-அவுட்டுக்கு முன்பாக, எம்.ஜி.ஆர். அணிந்துகொண்டு நடித்த உடையை அணிந்து பரத் நடனமாடினார்.

தம்பிக்கு இந்த ஊரு
அடங்க மறுத்த அழகு சிறுத்தை
என் தம்பிக்கு இந்த ஊரு

பாடலில் பரத்துடன் சனாகான், மற்றுமொரு நாயகி ரூபாலியும் ஆடியிருக்கிறார்கள். பரத்துக்கு 'காதல்' படத்துக்குப் பிறகு பெயர் சொல்லும்படி ஹிட் ஒன்றும் இல்லை என்பதால், இந்தப் படத்தைப் பெரிதும் நம்பியிருக்கிறாராம். இந்தப் படத்தின் வெற்றியைப் பொறுத்துதான் தனது சம்பளத்தை ஏற்றும் முடிவிலும் இருக்கிறாராம்.

– சத்யா

யோகா வகுப்புகள்

தினமும்

யோகா வகுப்புகள்

இங்கு கற்றுத்தரப்படுகிறது.

இந்த யோகா வகுப்புகளில் சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் கற்று கொள்ளலாம்.



## நோய்கள் வரும் முன் காக்கவும், வந்த நோய்களை குணப்படுத்தவும்






AN ISO 9001 : 2000

மருத்துவமனை

# தமிழகத்தில் ஒரே நவீன ஆயுர்வேத மருத்துவமனை




- வாதநோய்கள்
- இடுப்புவலி
- ஒற்றைதலைவலி
- மனஅழுத்தநோய்
- மலட்டுத்தன்மை
- தோல் நோய்கள்
- கழுத்துவலி
- பக்கவாதம்
- வயிறு சம்பந்தப்பட்ட நோய்கள்
- சைனஸ்
- கொலஸ்ட்ரால்
- கர்ப்பபைசம்பந்தமான நோய்கள்

குழந்தைகளுக்கு வரும் நோய்கள்

போன்ற நோய்களுக்கு ஆயூர்வேத மருத்துவ முறையில் சிறந்த சிகிச்சை அளிக்கப்படுகிறது.

உங்கள் நலம், எங்கள் லட்சியம்

**சிறப்பம்சங்கள்**

- அனைத்து நோய்களுக்கும் தேர்ச்சி பெற்ற ஆண், பெண் மருத்துவர்களின் ஆலோசனை
- உள்நோயாளி மற்றும் வெளிநோயாளிகளுக்கான பிரிவு
- பாரம்பரிய ஆயுர்வேத சிகிச்சை
- புத்துணர்ச்சியூட்டும் சிகிச்சைகள்

**வசதிகள் :**

- 28 படுக்கை அறைகள்
- கோட்டக்கல் ஆரிய வைத்திய சாலை மருந்தகம்
- உயர்தர சைவ உணவு விடுதி
- தன்வந்திரி கோவில்
- ரம்யமான மூலிகைத் தோட்டம்
- தினமும் யோகா மற்றும் தியான வகுப்புகள்



**இந்தியன் ஆயுர்வேத மருத்துவமனை மற்றும் ஆராய்ச்சி மையம்**

85, இராஜவிக்னேஷ் நகர், விளாங்குறிச்சி ரோடு, கணபதி, கோயமுத்தூர் – 06.

E-mail : info@indianayurvedichospital.com.

web : www.indianayurvedichospital.com

Ph : 0422 - 2510526, 2510528, Fax : 0422-2511516

Cell: 99449 75301-302, 90470 75112

# கோவையைக் காக்கும் கோனியம்மன்!

கோவை மாநகருக்கு பெயர்க்காரணமாய், நகரின் மத்தியில் காவல் தெய்வமாய், தன்னை வேண்டுபவர்களுக்கு வேண்டியதை அருளும் கண்கண்ட தெய்வமாய் கோயில்கொண்டு நிற்பவள்தான் கோனி அம்மன். தனிப்பெரும் அரசியான இவள் சைவாகம விதிப்படி துர்க்கா தேவியாக விளங்குகிறாள்.




**தலவரலாறு:** காடாக இருந்த கோவையைத் திருத்தி நாடாக ஆக்கினான் கோவன் என்ற இருளர் தலைவன். அவன் உண்டாக்கிய புதிய ஊர் புத்தூர். மன்னன் பெயர் சேர்ந்து 'கோவன்புத்தூர்' ஆயிற்று. இதுவே பிற்காலத்தில் கோயமுத்தூர் எனவும் அழைக்கப்பட்டது.

அவன் கட்டிய ஆதி கோயில் கோயமுத்தூருக்கு வடக்கில் துடியலூர் செல்லும் வழியில் சங்கனூர்ப் பள்ளத்தாக்கில் முதன் முதலில் இருந்தது. பல ஆண்டுகள் கழித்து கொங்கு நாட்டை ஆண்ட இளங்கோசர்கள், தங்களுக்குப் பாதுகாப்பாக ஒரு மண் கோட்டையைக் கட்டினார்கள். கோட்டைக்குள் ஈஸ்வரன் கோயிலைக் கட்டியவர்கள் கோட்டைக்கு வெளியே காவல் தெய்வமாக கோனியம்மனை ஒரு சிறு கோயில் கட்டி, அதில் பிரதிஷ்டை செய்தார்கள். அதிலிருந்து கோவையின் காவல் தெய்வமாக கோனியம்மன் பரிபாலனம் செய்து வருகிறாள்.

**கோனி அம்மன்:** மூலஸ்தானத்தில் வடக்குப் பார்த்து வீற்றிருக்கும் அம்மனின் திருஉருவம் மூன்றடி அகலமும், இரண்டரை அடி உயரமும் உடையது. எட்டு கைகளுடன், தன்னை எதிர்த்துப் போர் செய்த அரக்கனை, தன் காலடியில் வீழ்த்தி வெற்றி கொண்ட வீரப் புன்னகை முகத்தில் நிலவ, வலக்கைகள் நான்கிலும் சூலம், உடுக்கை, வாள், சங்கம் ஆகிய ஆயுதங்களு

டனும் இடது கைகள் நான்கிலும் கபாலம், தீ, சக்கரம், மணி ஆகிய நான்கு ஆயுதங்களும் ஏந்தியபடி அம்மன் வீற்றிருக்கிறாள். இடச்செவியில் தோடும், வலச் செவியில் குண்டலமும் தரித்தவளாய் காட்சியளிக்கிறாள் ஸ்ரீ கோனியம்மன்.

**மற்ற சன்னிதிகள்**

திருக்கோயில் முன்புறமாக ஐந்து முகமும், பன்னிரு கரங்களையும் கொண்ட வித்தியாசமான பஞ்சமுக வினாயகர்சன்னிதியும், உட்பிராகாரத்தில் சாந்த வினாயகர் சன்னிதியும் உள்ளன. சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை யுடன் காட்சி தருகிறார்.

இங்குள்ள நவக்கிரக நாயகர்கள், தங்கள் நாயகிகளுடன் இணைந்து காட்சி தருவது இந்த ஆலயத்தின் கூடுதல் சிறப்பு.

**ஆதி கோனியம்மன்:** கோசர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆதி கோனியம்மன் திருவுருவம் கால மாறுபாடுகளால், சிதைந்து போனாலும் இந்த அம்மனின் சிரசுப் பகுதி மட்டும் அருள் ததும்பும் வகையில் அமைந்துள்ளது.

செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளில் இத் தலத்திலுள்ள துர்க்கை அம்மனை இராகு காலத்தில் எலுமிச்சம் பழத்தில் விளக்கேற்றி வழிபட்டால் திருமணத் தடைகள், காரியத் தடைகள், தொழில் நஷ்டம் போன்றவை நீங்கும் என்பது ஐதிகம்.

**மாவிளக்கே மருந்து:** நோய் நொடிகள் வந்தாலோ, வைசூரி, காலரா போன்ற தொற்றுநோய்கள் ஏற்பட்டாலோ, கோனி அம்மனது திருவடிகளே துணை என்று நம்பி, மாவிளக்கு ஏற்றிப் பொங்கலிட்டால், கருணை பொழிந்து அம்மன் காப்பாற்றுவாள்!



**அயல்நாட்டிலும் அம்மனுக்குப் பக்தர்கள் :**

மும்பை, கொல்கத்தா, கேரளா, ஆந்திரா, கர்நாடகா முதலிய வெளி மாநிலங்களிலும், ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, அமெரிக்கா, ரஷ்யா போன்ற வெளி நாடுகளிலும் கோனியம்மனுக்கு தீவிர பக்தர்கள் உண்டு.

**புதுமையான நிகழ்வு:** திருமணத்துக்காக இங்கு



**ஆர். பாலா**

பெண்ணும் மாப்பிள்ளையும் அவரவர் உறவினர்களுடன் ஒருவரை ஒருவர் வந்து பார்க்கும் நிகழ்ச்சி சிறப்பாக நடைபெறுகிறது. இங்கு நிச்சயிக்கப்படும் திருமணங்கள் சீரும் சிறப்புமான வாழ்க்கையைத் தரும் என்று நம்புகிறார்கள். இங்கேயே பெண்ணும், மாப்பிள்ளையும் பெரியவர்கள் முன்னிலையில் பார்த்துக்கொண்டு ஒருவருக்கு ஒருவர் பிடித்துவிட்டால், கோயிலிலேயே தனியாகச் சென்று மனம் திறந்து பேசிக்கொள்கிறார்கள்.

அதுமாதிரியே இரு வீட்டாரிடையே நிச்சய தார்த்தம், உப்பு மாற்றிக் கொள்ளுதல் என்னும் நிகழ்ச்சி மூலமாகத்தான் கோவையில் உறுதிப் படுத்தப்படுகிறது.

**அன்னையின் நகர்வலம்:**

திருவிழாக் கொடி ஏற்றத்துக்கு மறு நாள் புலி வாகனம், கிளி வாகனம், சிம்ம வாகனம், அன்ன வாகனம், காமதேனு வாகனம், வெள்ளை யானை வாகனம், குதிரை வாகனம், இந்திர விமானத் தெப்பம் முதலிய வாகனங்களில் கோனியம்மன் நகர்வலம் வரும் காட்சி மனத்தைக் கொள்ளைகொள்ளும்.

திருவிழாவில் முதல் வெள்ளிக் கிழமையன்று பெண்கள் கலந்துகொள்ளும் திருவிளக்குப் பூஜை வெகுவிமரிசையாக நடைபெறும்.

**தெப்பத் திருவிழா:**

இரவு இந்திர விமானப் பல்லக்கில் புறப்பட்டு பல முக்கியமான வீதிகளில் உலாவந்து சிறப்பான பல மண்டகப் படிகளை ஏற்றுக் கொண்டு வேணு கோபாலசுவாமி கோயிலை அடைந்து அங்குள்ள தெப்பக்குளத்தில் இறங்குவாள் கோனியம்மன். சிறப்பு அபிஷேகம், வசந்த மண்டபத்தில் அம்மன் எழுந்தருளுதல் என கொடி இறக்கத்துடன் திருவிழா நிறைவு பெறும்.



**கோனியம்மன் கோயிலிலுள்ள நவக்கிரக நாயகர்கள் தங்கள் நாயகிகளுடன் இணைந்திருப்பது கூடுதல் சிறப்பு!**

**நவரசமான நவராத்திரித் திருவிழா:**

ஆடி வெள்ளிக் கிழமை, தை வெள்ளிக் கிழமை, நவராத்திரி, மாதப் பிறப்பு, பௌர்ணமி பூஜை, கார்த்திகை, தீபாவளி, தனுர்மாத விழா, தைப்பொங்கல் என உற்சவங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ஆடி வெள்ளிக் கிழமைகளிலும், நவராத்திரி ஒன்பது தினங்களிலும் அம்மனுக்குச் செய்யும் விதவிதமான அலங்காரங்களைப் பார்த்து, பக்தர்கள் ஆனந்தப் பரவசம் அடைகிறார்கள். ●

**கோயில் திறந்திருக்கும் நேரம்:**

**காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை**
**மாலை 4.00 மணி முதல் 9.00 மணி வரை**

**பூஜை நேரம்:**
**கால சந்தி : காலை 8.00 மணி**
**உச்சிக் காலம்: நண்பகல் 12.00 மணி**
**சாயரட்சை: மாலை 7.00 மணி**
**அபிஷேக நேரங்கள் : காலை 6.00 மணி முதல் 10.00 வரை**


★ பீரங்கிமேடு

# தில்லான கோட்டை!

**கோ**வை மேட்டுப்பாளையம் வட்டம் காரமடையிலிருந்து மூன்று கி.மீ. தூரத்திலுள்ள பெள்ளாதியில் திப்புசுல்தான் கோட்டை இருந்ததற்கு அடையாளமாக, தற்போது பீரங்கிமேடு மட்டுமே இருக்கிறது. இந்த பெள்ளாதியின் ஆதிப்பெயர் வெள்ளாதி. மருதூர் கட்டாஞ்சியின் மலைநீர், பெள்ளாதியின் வால்காவிரியில் கலந்து பவானிநதி வழியாக காவிரியில் சங்கமமாகிறது. மலை வெள்ளம் வந்து கலக்கும் ஆதி இடம் என்பதால் வெள்ளாதி. கன்னடம் தாக்கத்தால் பெள்ளாதி ஆயிற்று! திப்புசுல்தான் இந்தக் கோட்டையைக் கைப்பற்றும் முன்னமே ஆறை நாட்டின் புகழ் வாய்ந்த கோட்டையாக இது இருந்திருக்கிறது.


★ திப்புசுல்தான்


★ சின்னராமசாமி

★ ஆறை நாட்டின் 22 கோட்டைகளுள் வெள்ளாதி கோட்டையும் ஒன்று.

★ ஆறை நாட்டை மன்றாடியார் வம்சத்துப் பிரதிநிதி சிறப்பாக ஆண்டதால், இந்தக் கோட்டை பச்சு மன்றாடியார் கோட்டை எனவும் அழைக்கப்பட்டு வந்தது.

★ கி.பி. 1285 - 1305 காலத்தைச் சார்ந்த சங்கமேஸ்வரர் கல்வெட்டில், கொங்கு பாண்டியன் சுந்தரபாண்டியன், இக்கோட்டையை வடபாரிச நாட்டு வெள்ளாதிக் கோட்டை என்று குறிப்பட்டிருக்கிறான்

★ திப்புசுல்தான் பாலக்காட்டின் மீது படையெடுத்துச் செல்லும்போதுதான் வெள்ளாதிக்கோட்டையைக் கைப்பற்றியிருக்கிறார். இந்தக் கோட்டையின் வழியாகத்தான் அவர் படைநடத்திச் சென்றார் என்பதற்கு ஆதாரமாக சின்னமத்தப்பாளையத்தில் திப்புசுல்தான் ரோடு இன்றளவும் உள்ளது.

**ச**மீபத்தில் கோட்டைக்குள் இருந்த அம்மன் கோயிலை, திருப்பணி செய்வதற்காக புல்டோசர் மூலம் பூமியைச் சமன்படுத்தியபோது, திப்பு காலத்துக் கையெறி குண்டுகள் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

★ ''அம்மன் கோயிலுக்குத் திருப்பணி செய்தபோது இந்தக் கோட்டைச் சுவர்களுக்கு ஆதாரமாக விளங்கிய தூர்ந்துபோன மண் மேடுகளையும் அகழிகளின் எச்சத்தையும் புல்டோசர் கொண்டு சமன்செய்து விட்டனர்! புராதன சின்னமான இக்கோட்டையைப் பாதுகாக்க வேண்டிய அரசு, கண்டுகொள்ளாமல் விட்டதால், இன்று பீரங்கி மேட்டோடு பாழ்பட்டுக்கிடக்கிறது'' என்கிறார் பத்திரிகையாளர் சின்னராமசாமி

வாசகர் யோசனை: **சின்னராஜ்**



**"சாதாரணமா எங்கள மாதிரி விவசாயக் குடும்பங்கள்ல, பெண்கள் பிஸினஸ்ல வர்றதை ஏத்துக்க மாட்டாங்க. நானும் என் அப்பாவும் வசந்தியோட ஆர்வத்துக்குத் தடைபோட விரும்பலே!" என்கிறார் கணவர் கிருஷ்ணமூர்த்தி.**

**வசந்தி கிருஷ்ண மூர்த்தி யார்?**

சாந்தி மசாலா, சாந்தி தேங்காய் எண்ணெய் என்று பிரபலமாக இருக்கும் கோவை சாந்தி ஃபார்ச்சூன் இந்தியா (பி) லிமிடெட் நிறுவன நிர்வாக இயக்குனர்.

❝

7-8 வயசு இருக்கும்போதே என் கிட்டே, 'நீ டாக்டராகப் போறியா, என்ஜினியராப் போவியா?'ன்னு கேட்கறப்ப, 'என் சொந்தக் கால்ல நிக்கப் போறேன்!'னு சொல்வேன்.

92'ல பி.எஸ்.ஜி.ல நியூட்ரிஷன் அண்ட் டயட்டிக்ஸ் படிச்சு முடிச்சப்புறம் பத்தொன்பது வயசுல கல்யாணம். கணவர் கிருஷ்ணமூர்த்தி பவுல்ட்ரி ஃபீட், பவுல்ட்ரி பிஸினஸ்ல இருந்தார். அவரும் மாமனாரும் பேசிப் பேசி என் ஆர்வத்தைத் தூண்டினாங்க. 23 வயசுல இந்த பிஸினஸுக்கு வந்தேன். ஆனா, எக்ஸிக்யூடிவ் டைரக்டராயிடலே. மார்க்கெட்டிங்கில, ஈ.டி.பி. செக்ஷன்ல எல்லாம் என்னென்ன கத்துக்கணுமோ அதெல்லாம் கத்துக்கிட்டேன்.

பெண்கள் பிஸினஸுக்கு வர்றபோது சில பிரச்னைகள், பேச்சுக்கள் எல்லாம் வரத்தான் வரும். அதுக்கெல்லாம் நான் அப்செட் ஆகலே. பத்துத் தடவை தோற்றாலும் நான் கவலைப்பட மாட்டேன். பதினோராவது தடவை ஜெயிச்சாகணும். அதான் என்னோட நினைப்பு.

ஹோம் நியூட்ரிஷன், அனிமல் நியுட்ரிஷன் ரெண்டும் கிட்டத்தட்ட ஒண்ணுதான். அதனால எனக்கு எங்க பிஸினஸ்ல இன்ட்ரஸ்ட் வந்தது. என் கணவர் என்னை ரொம்ப என்கரேஜ் செஞ்சார். தவறான முடிவு எடுக்கற நிலையில எல்லாம், அவருடைய வழிகாட்ட லின் உதவியுடன் சரிபண்ணிக்கிட்டேன். அனுபவம் கிடைக்கக் கிடைக்க நிறையத் தெரிஞ்சுக்கிட்டேன்.

ஃபுட் பிஸினஸ்ங்கறது வளர்ந்துட்டே இருக்கற தொழில். வால்யூம் வேணா சில சமயம் குறையலாம். ஆனா தேவை எப்பவும் இருந்துட்டே இருக்கும்.

என்னோட முயற்சியால் மட்டுமே நான் வெற்றி அடைஞ்சேன்னு சொல்ல மாட்டேன். எங்கள் நிறுவனத்தின் வெற்றிக்கு டீம் வொர்க்தான் காரணம்.

# வசந்தியின்

சிலசமயம் நாம் நினைக்கிற மாதிரி நடக்காது. தப்பான அடி எடுத்து வைச்சிருப்போம். அதுக்கு விமர்சனங்கள் வரும். ரியாக்ட் பண்ண மாட்டேன்.

பிராடக்ட் கம்ப்ளெயின்ட்னு வந்தா என்ன குறைபாடுன்னு கவனிப்பேன். ஒரு தடவை பாக்கேஜிங்ல கலர் மாத்த வேண்டியிருந்தது. பொருளுக்குத் தகுந்த மாதிரி, சில கரெக்‌ஷன் பண்ணணும்னு வந்தா பண்ணிக்கணும்.

என்னோட அணுகுமுறையில, பொறுப்பா இருக்கணும்கற அக்கவுன்டபிலிடியில எல்லாம் கணவர் என்னை கைடு பண்ணுவார். எந்த விஷயத்தையுமே ரெண்டு பேரும் ஷேர் பண்ணிப்போம். ஒரு தோல்வி வந்துட்டுதேன்னு சோர்ந்து போயிட மாட்டேன். மறுபடி மறுபடி முயற்சி பண்ணுவேன். சவால்கள் நிறைய வந்திருக்கு. பத்து விஷயங்கள்ல ட்ரை பண்ணா, அஞ்சுல வெற்றி கிடைச்சுடும். ஆனால் சரியான சானல்-ல போகணும்.


* வசந்தி


* கிருஷ்ணமூர்த்தி

# வெற்றிக்கதை!

பிஸினஸ்ல பணம் முக்கியம்தான். ஆனா கூடவே, தன்னம்பிக்கை, கடுமையான உழைப்பு, விடாமுயற்சி இதெல்லாமும் முக்கியம். எல்லாம் சேர்ந்தால்தான் வின் பண்ண முடியும். நான் எதையுமே பாஸிடிவ்வாத்தான் எடுத்துப்பேன். இன்ஃபாக்ட், பிரச்னைகள் அதிகமாக அதிகமாக, பக்குவம் தானா வந்துடும். நம்முடைய செய்கைகள் பிறரைப் பாதிக்காத அளவுக்கு இருந்தாப் போதும்னு நினைக்கிறவள் நான்!

சாந்தி ஃபார்ச்சூன் (இந்தியா) பி.லிட்., தலைமையகம் கோவை ராமநாதபுரம் வெங்கடலக்ஷ்மி காம்ப்ளெக்ஸில் இயங்கி வருகிறது. (ஃபோன் 0422-4393390/91/92)

**நேர்காணல்: சாருகேசி**




**கின்னஸ் புத்தகத்தில் இடம்பெற இருக்கும் ஒரே தமிழ் எழுத்தாளர் ராஜேஷ்குமார். 1500 க்ரைம் நாவல்களுக்கு மேல் எழுதிக் குவித்தவர், இன்னொரு நாவலை விரல்களால் விறுவிறுப்பாக்கிக் கொண்டிருந்தபோது சந்தித்தோம்.**

**இடுப்பில் நாவல்:** ஒருமுறை கோவையிலேர்ந்து வடவள்ளிக்கு டூ வீலர்ல வந்துக்கிட்டு இருக்கேன். வர்ற வழியில வண்டி பஞ்சர் ஆயிடுது. பக்கத்துல ஆடு மேய்ச்சுக்கிட்டிருந்த சிறுவன்கிட்ட, பஞ்சர் ஒட்டற கடை எங்கே இருக்குன்னு கேட்கறேன். ''அந்த முக்குல இருக்குண்ணே''ன்னு கையை உயர்த்திக் காண்பிக்கறான். இடுப்புல பார்த்தா, என்னோட க்ரைம் நாவல் சொருகியிருக்கு. இப்படி ஆடு மேய்க்கறவனையும் படிக்க வைக்கற பாக்கியம் யாருக்குக் கிடைக்கும். என்னோட நாவல்கள்ல மோசமான க்ரைமும் கிடையாது.

**அதென்ன மோசமான க்ரைம்?:** பாலியல் பலாத்காரத்தை விலாவாரியா எழுதுறது; போஸ்மார்டம் பண்ணறதைக் காட்சிப் படுத்தறது; காமத்தை எழுத்தில் முன்னிலைப்படுத்தறது. கொலை பண்றதுக்கு ஸ்கெட்ச் போட்டுக்கறது போல எழுதுறது. இவை போன்ற விஷயங்கள் இடம்பெறுவது மோசமான க்ரைம்.

**ரூபலா ஒரு கேள்விக் குறி!** என்னைச் சந்திக்கற எல்லாருமே கேட்கற முதல் கேள்வி, 'யாருங்க ஸார், விவேக்... ரூபலா...?' என்பதாதான் இருக்கு. விவேகானந்தர் மேல உள்ள ஈர்ப்பால ஆண் கேரக்டருக்கு விவேக்குனு பேர் வைச்சேன். ரூபலான்னு பெண் கேரக்டருக்கு பேர் வைச்சது பெரிய கதை. ஒருமுறை, மதுரைக்குப் போயிருந்தேன். தங்கறதுக்கு ரூம் கிடைக்கல. வேற இடத்துல கிடைக்குதான்னு பார்ப்போமேன்னு போய்க்கிட்டு இருக்கும்போது ஒரு பெண் குரல், ''ஸார், நீங்க ரைட்டர் ராஜேஷ்குமார்தானே?'' எனக்கு ஆச்சர்யம். இவங்ககிட்ட பேசிக்கிட்டு இருக்கும்போது, ரூம் கிடைக்காத விஷயத்தைச் சொன்னேன். உடனே அவங்க ஹோட்டல்ல பேசி, தங்கறதுக்கு ஏற்பாடு பண்ணுனாங்க. அப்ப, ''என்னோட பேர் ரூபலா.. வித்தியாசமா இருக்கில்ல... என் பேரைப் பிரபலமாக்க முடியுமா?''ன்னு கேட்டாங்க. ''பண்ணிட்டா போச்சு''ன்னு

# ரூபலா, ஒரு கேள்விக்குறி!



அடுத்த ரெண்டாவது மாசமே விவேக்குக்கு இந்த ரூபலாவைக் கல்யாணம் பண்ணி வைச்சுட்டேன்! இது நடந்து கிட்டத்தட்ட இருபத்தைஞ்சு வருஷம் ஆகப் போகுது. அதுக்குப் பிறகு அவங்க என்ன ஆனாங்க... எங்க இருக்காங்க... என்னோட கதைகளைப் படிக்கறாங்களா... எதுவுமே தெரியலை. நான் எத்தனையோ தடவை மதுரைக்குப் போய்ட்டு வந்துட்டேன். ஆனா, இன்னை வரைக்கும் ரூபலா ஒரு கேள்விக்குறிதான்!

**சினிமாவா? வேஸ்ட்!:** மனுஷனோட நேரத்தை வீணடிக்கறதுல சினிமாத் துறைக்கு முதலிடம். இப்ப அரசியல்ல பிரபலமா இருக்கற ஒரு ஹீரோவோட படத்துக்குக் கதை டிஸ்கஷனுக்காக என்னை

சென்னைக்குக் கூப்பிட்டு, ஒரு ஹோட்டல்ல ரூம் போட்டுக் கொடுத்தாங்க. காலையில வந்தவுடனே டிஃபன் சாப்பிடுவாங்க. கதையைத் தவிர மத்த எல்லா விஷயத்தையும் பேசிட்டு லஞ்ச். லஞ்ச்சுக்குப் பிறகு மறுபடியும் அது கண்டினியூ ஆகும். அப்புறம்தான் கதை ஞாபகத்துக்கு வரும். என்னப்பா கதை?ன்னு கேட்கறதுக்குள்ள ஈவ்னிங் ஆயிடும். இப்படியே மூணு நாள் போச்சு. ச்சீ ச்சீ இது நமக்குச் சரிப்பட்டு வராதுன்னு முடிவுக்கு வந்தேன். மூணாவது நாள் கடைசியில, ''ஸார் உங்களுக்கு ஏதாவது வேணுமா?''ன்னு கேட்டாங்க. கோயமுத்தூருக்கு டிக்கெட் எடுத்துக் கொடுங்கன்னு சொல்லிட்டு வீடு வந்து சேர்ந்துட்டேன்.

**விருதுகள் எதுக்கு? :** கோவை தமிழ் நாடு ஹோட்டல்ல நடந்த ஒரு நவீன இலக்கியக் கூட்டத்துல நான் பேசும்போது ஒரு எழுத்தாளர், ''நீங்க ஒவ்வொரு பத்திரிகைக்கும் வேற வேற மாதிரி எழுதுறீங்களே, அது வேசித்தனம் இல்லையா?''ன்னு கேட்டார். ''இல்லை... சாணக்கியத்தனம்''னு சொன்னேன். இவங்களுக்கு என் எழுத்து மேல எந்தக் கோபமும் கிடையாது. என்னைப் போல பிரபல பத்திரிகைகள்ல அவங்களால எழுத முடியலையேங்கற பொறாமைதான்! எழுத்தாளர்களுக்கு விருதுகள் தரும்போதுகூட, 'இந்த வருடம் எனக்கு விருது, நீ பேசாம இரு. அடுத்த வருடம் உனக்கு விருது நான் பேசாம இருக்கேன்'னு சொல்லி வைச்சுக்கிட்டுத்தான் வாங்கிக்கறாங்க. கொடுத்துக்கறாங்க... அப்படி வர்ற விருதுகள் எதுக்கு?

**க்ரைம் டு ஆன்மிகம்:** ''க்ரைம் எழுதினாலும் அடிப்படையில ஆன்மிகவாதி. இப்பக்கூட 'சித்தர்கள் பித்தர்களா?' 'நீயும் பொம்மை நானும் பொம்மை...'ன்னு இரண்டு புத்தகம் எழுதியிருக்கேன். நான் ஆன்மிகம்னு சொல்றதை எந்த மதத்தோடும் சம்பந்தப்படுத்தத் தேவையில்லை. ஆனால், கண்டிப்பா சித்தர்களைப் படிக்கணும். ஆன்மிகத்தையும், அறிவியலையும் சமமான கண்ணோட்டத்தோடு அணுகியவர்கள் அவர்கள்தான்!'' ●



''ஆடு மேய்க்கறவன் இடுப்புல என்னோட நாவல்!''










# மேலைச் சிதம்பரம்

**கோ**வையிலிருந்து சிறுவாணி செல்லும் சாலையில் 7 கி.மீ. தூரத்தில் இருக்கிறது மேலைச் சிதம்பரம் என்றழைக் கப்படும் பட்டீஸ்வரர் கோயில். 1800 ஆண்டுகள் பழைமை வாய்ந்தது இத்தலம். பட்டிபுரி, காமதேனுபுரம், தட்சிணகைலா யம்... இதன் மற்ற காரணப் பெயர்கள். ● பட்டீஸ்வரரை வணங்கினால் பிறவா வரமும், இறவாப்பேறும் கிடைக்கும் என்பது ஐதீகம். ●சான்றாக இருக்கின்றன கோயில் வளாகத்தில் பட்டுப் போகாமலே பல ஆண்டுகள் இருக்கும் பனையும், காய்க்காத புளியமரமும். ●அருணகிரி நாதரின் சூலை நோயைப் போக்கி, முருகப் பெருமான் அவரைத் திருப்புகழ் பாட வைத்தது இத்தலத்தில்தான். முருகப் பெருமான் மூன்று இடங்களில்தான் மேற்கு நோக்கி அமர்ந்துள்ளார். ஒன்று பழநி, மற்றொன்று திருவண்ணாமலை, மூன்றாவது பேரூர். ● இறைவி மரகத வல்லி, சதுரவடிவ நாகரவிமானத்தைத் தாங்கிய கருவறைக்குள் பத்மபீடத்தில், நின்ற நிலையில், சௌந்தர்ய ரூபணியாகக் காட்சி தருகிறாள். ● மனோசக்தியின் அடையாளமாக மனோன்மணியத் தாயார் இங்கு மட்டும்தான் கருவறைக்கு வெளியே காட்சி தருகிறார். ● இங்கு மட்டும்தான் இறைவனுக்கு அருகிலேயே ஸ்தல தீர்த்தம் (மூலவருக்கு இடது புறம் வாத்ய மண்ட பத்தில் காமதேனுவினால் உருவாக்கப்பட்ட சிருங்கக் கிணறு) இருக்கிறது! ● நாய் வாகனம் இல்லாமல் காட்சி தரும் ஞானபைரவரை, நாற்பத் தெட்டு நாட்கள் விரதமிருந்து வழிபட்டு வந்தால், இதய நோய் தீரும் என்பது நம்பிக்கை. ● இத்தலத்தின் கனகசபையில்தான் பிரம்மா, திருமால், அதிஉக்ரகாளி, சுந்தரர், நந்திபெருமான் ஆகியோருக்காக சிவபெருமான் ஆனந்த நடனம் ஆடினாராம். ● இச்சபையிலுள்ள தூண் சிற்பங்கள் நிகரில்லா எழில் உடை யவை. ● இந்த நடன சபையை அமைக்க 34 வருடங்கள் பிடித்ததாம். தலைமை சிற்பியின் பெயர் கபமனாச்சாரி. ● நான்கு வேதங்களும் இங்கு நான்கு தூண்களாகப் பணிந்து இறைவனை வழிபடுகின்றன என்பது ஐதீகம். ● ''பேரூர் சுற்று வட்டா ரத்தில் மாடு இடுகின்ற சாணத்தில்கூட புழு வைக்காது. அந்தளவுக்கு அது புண்ணிய பூமி'' என்கிறார் சிவபக்தரான மண்டையோட்டு சிவராமன்.

வாசகர் யோசனை : **பாலசரஸ்வதி**



பொருளாதார உருக்கத்தால் காட்டன் மில்கள் இழுத்து மூடப்பட்டு, கிட்டத்தட்ட ஐம்பதாயிரத்துக்கும் அதிகமானோர் வேலைவாய்ப்பை இழந்திருக்கின்றனர்'' என்கிறார் கோவை வர்த்தகச் சங்கத்தின் வைஸ் பிரஸிடெண்ட் கிருஷ்ணா.

''கோவை வர்த்தகச் சங்கம், புறக்கணிக்கப்பட்ட கோவையின் புண்பட்ட குரல்கள் என்ற பத்து அம்சக் கோரிக்கையை மக்களிடம் துண்டுப்பிரசுரங்கள் மூலம் கொண்டு சேர்த்திருக்கிறது. வோட்டுக்காக உங்கள் வீட்டுக் கதவை அரசியல்வாதிகள் தட்டும்போது மறக்காமல் உங்கள் தேவைகளையும் கேளுங்கள். பிறகு வாக்களியுங்கள் என்றும் அறிவுறுத்தியிருக்கிறோம்'' என்று சொல்லும் கிருஷ்ணா, அந்தப் பத்து அம்சக்

# புறக்கணிக்கப்பட்ட

''தென்னிந்தியாவின் மான்செஸ்டர். கரன்ஸிகள் சகஜமாகப் புழங்கும் மாநகரம். காட்டன் ஸிட்டி; கூடவே காஸ்ட்லி ஸிட்டி... இன்னும் எத்தனையோ சிறப்புகள் உண்டு கோவைக்கு. ஆனால், இத்தனை பெருமைகளுக்கும் பின்னால், அரசாங்கத்தின் நலத் திட்டங்கள் கொடுத்த ஊக்கமோ, அல்லது இங்கிருந்து சட்டமன்றத்துக்கும் நாடாளுமன்றத்துக்கும் மக்களால் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட பிரதிநிதிகள் மேற்கொண்ட முயற்சிகளோ இல்லை. கோவையின் ஒவ்வொரு அங்குல வளர்ச்சிக்குப் பின்னும் ஒவ்வொரு தனிமனிதனுடைய உழைப்பும் இருக்கிறது. இருந்தும் முன்பு இருந்த செழிப்பு இப்போது இல்லை. உலகப்

கோரிக்கையையும் நம்மோடு பகிர்ந்து கொண்டார்...

**1.சாலைகள்:** கோவை வழியாகச் செல்லும் தேசிய நெடுஞ்சாலைகளை அடுத்த நகரம் வரை ஆறு வழிப் பாதையாக மாற்ற வேண்டும். பழம்பெரும் ஊரான பேரூர், பிரபல ஆன்மிக ஸ்தலமான மருதமலைக்குச் செல்லும் சாலைகளை நான்கு வழிப் பாதையாக மாற்றினால் விபத்துகள் குறையும். பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பே திட்டமிட்ட ரிங்ரோடு என்னவாயிற்று? நூற்றுக்கும் மேற்பட்ட திட்டச் சாலைகள் திட்டங்களைக் கிடப்பில் போட்டிருப்பது ஏன்?

**2.பெருநகர வளர்ச்சிக் குழுமம்:** *1994* முதல் திருத்தி அமைக்கப்படாத கோவை

நகர மாஸ்டர் ப்ளான் மற்றும் கட்டட விதிமுறைகளை எதிர்காலத் தேவைக்கு ஏற்ப மாற்றி அமைக்க வேண்டும். சென்னையில் இருப்பது போல கோவைக் கும் பெருநகர வளர்ச்சிக் குழுமம் தேவை.

**3.விவசாய ஏற்றுமதி வளாகம்:** கோவை விமான நிலையத்துக்கு அருகி லேயே, விவசாயப் பொருட்களின் ஏற்று மதிக்காக, குளிர்பதன வசதியுடன் கூடிய ஏற்றுமதி வளாகம் அமைக்க வேண்டும்.

**4.விமான நிலையம்:** கோவை விமான நிலையத்தை, சர்வதேச விமான நிலை யத்துக்குச் சமமான கட்டுமான வசதியுள்ள தாக மாற்ற வேண்டும். அதன் அணுகு சாலைகளை நான்கு வழிப் பாதையாக மாற்ற வேண்டும்

**5.சுற்றுலா, பொழுதுபோக்கு, விளை யாட்டு:** சுற்றுலா மூலம், வெளிநாட்டுப் பயணிகளை அதிக அளவில் ஈர்க்கும் கோவையின் சுற்று வட்டாரப் பகுதிகளில் சிறுவர் களுக்கான விளையாட்டுப் பூங் காக்கள் இல்லாதது பெருங் குறையே. நீர்நிலைப் பகுதிகள் மற்றும் இயற்கை எழில்மிக்க பகுதிகளிலும் பொழுதுபோக்கு வசதிகளை ஏற்படுத்தித் தர வேண்டும். பேரூரை பாரம்பரியமிக்க பண்பாட்டுத்தலமாக அறிவிக்க வேண் டும்.

**6. மருத்துவமனைகள்:** நூற்றாண்டு கண்ட கோவை அரசு பொது மருத்துவ மனை மற்றும் தொழிலாளர் மருத்துவ மனைகளின் தரத்தை சர்வதேச அளவுக்கு உயர்த்த நடவடிக்கை எடுக்கவேண்டும். கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்து வதை அரசு கவனத்தில் கொள்ள வேண்டும்.

**7.நொய்யலாறு :** நொய்யலாற்றில் இருக்கும் ஆக்கிரமிப்புகளை அகற்றி, தூர்வார வேண்டும். அதனால் பாதிக்கப் படும் மக்களுக்கு, உரிய நிவாரணம் வழங்க வேண்டும்.

**8.மின் திட்டங்கள்:** தொழில் நகரமான கோவையில் தடையற்ற மின்சாரத்தை வழங்க, புதிய மின்திட்டங்களை நடை முறைப்படுத்த வேண்டும்.

**9. ரயில் போக்குவரத்து:** சாலைப் போக்குவரத்திலிருக்கும் நெரிசலைக் குறைக்க, கோவைக்கு அருகிலிருக்கும் திருப்பூர், மேட்டுப்பாளையம், பொள் ளாச்சி, பாலக்காடு... போன்ற ஊர்களுக்கு குறுகிய தூர ரயில் போக்குவரத்தை ஏற்படுத்த வேண்டும். போத்தனூர், இருகூர் ரயில் நிலையங்களை புறநகர் ரயில் நிலையங்களாக விரிவு படுத்த வேண்டும்.

# கோவையின் புண்பட்ட குரல்கள்!




**10. குடிநீர், குடியிருப்புத் திட்டங்கள்:** ஜே.என்.என். யூ.ஆர்.எம். திட்டத்தின் கீழ் ஏழைகளுக்கு நிரந்தரக் குடியிருப்பு, பில்லூர் குடிநீர்த் திட்டம் ஆகியவற்றுக்கு மத்திய அரசு அளித்துவரும் மானியத்தை அதிகப்படுத்த வேண்டும்.

●

**க**விதா - சுரேஷ் தம்பதியின் இரண்டு மாத ஆண் குழந்தைக்கு இன்னும் பெயர் கூட வைக்கவில்லை. ஆனால், குழந்தைக்கு இரண்டு கண்களிலும் காடராக்ட் வந்திருப்பது, பிறந்த உடனேயே தெரிந்து விட்டதாம்! எப்படி அதற்குள் தெரிந்தது?

''எங்க அப்பாவுக்கு காடராக்ட் இருந்தது. என் பையன் சுரேஷுக்கும் இருக்குது. என் பெண்ணோட குழந்தைக்கும் அப்படித்தான். பரம்பரையாவே வந்துட்டிருக்கு!'' என்கிறார் சுரேஷின் அம்மா.

ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொன்னபோது முதலில் தாத்தா சம்மதிக்கவே இல்லையாம். கண் போயிடும் என்று தடுத்தாராம்.

''ஆனா எனக்குத் தெரியும். ஆபரேஷன் பண்ணினாத்தான் குழந்தைக்குக் கண் தெரியும்னு. பிரசவம் ஆன பத்து நாள்லேயே ஆபரேஷன் பண்ணிடறதுன்னு முடிவு எடுத்துட்டோம்!'' என்கிறார் சுரேஷின் அம்மா.

**''கோவை ஐ ஃபவுண்டேஷனுக்கு எப்படி வந்தீர்கள்?''**

''முன்னாலேயே பழைய ஆஸ்பத்திரிக்கு செக்-அப்புக்கு வந்திருக்கோம். பயம் இல்லாம இருக்கலாம்னு தெரியும். மூத்த பொண்ணு ஸ்ரீலட்சுமிக்கு தூரப்

* டாக்டர் ராமமூர்த்தி



# விழியே

**ஹ**ரியானாக்காரர் விஷால்குமார், தன் மனைவி ஸோனலுடன் தன் அம்மாவைக் கூட்டிக் கொண்டு 'டெரிஜியம்' என்ற கோளாறு காரணமாக ஐ ஃபவுண்டேஷன் வந்தார்.

டெரிஜியம் என்பது கார்னியாவின் மீது வளரும் திசு. பெரிதாக வளர்ந்து, பார்வையைத் தடைசெய்யும். இது வருவதற்கான காரணம் இன்னதென்று குறிப்பாகச் சொல்லமுடியாது என்றாலும், சூரிய வெளிச்சம் அதிகமாகக் கண்களில் பட்டு, குறிப்பாக அல்ட்ரா வயலட் கதிர்கள் தாக்கும்போது வரலாம். வறண்ட கண்களிலும் டெரிஜியம் பாதிப்பு வரலாம்.






* சிகிச்சை பெறும் ஸோனம்.



பார்வை இருக்கு. ரெண்டே முக்கால் வயசு ஆச்சு. கண்ணாடி போட்டிருக்கோம்!'' என்கிறார் சுரேஷின் அம்மா.

''பிறந்த குழந்தைக்கு இரண்டு அடி வரைதான் முதலில் கண் பார்வை தெரியும். பார்க்கப் பார்க்கத்தான் விஷன் டெவலப் ஆகும். ஐந்து வருஷம் கழித்து இவர்கள் அறுவைச் சிகிச்சைக்கு வந்திருந்தாலும் குழந்தைக்குக் கண் பார்வை கிடைத்திருக்கும். ஆனால், குறைவான பார்வையாக இருக்கும். பிரச்னை இதுதான் என்று தெரிந்த பிறகு, தாமதம் செய்யாமல் சிகிச்சை எடுத்துக் கொள்வது கண்பார்வை முழுவதுமாகக் கிடைக்க உதவும்'' என்கிறார் குழந்தைக்கு அறுவைச் சிகிச்சை செய்த டாக்டர் ராமமூர்த்தி, கோவை தி ஐ ஃபவுண்டேஷன் நிறுவனர் மற்றும் மெடிகல் டைரக்டர்.



# மொழி பேசு!

ஆனால், டெரிஜியம் சோதனைக்கு வந்த விஷால்குமாருக்கு, கூடவே காடராக்ட்டும் இருப்பது தெரியவந்தது.

''ஒரே அறுவை சிகிச்சையில் இரண்டு பிரச்னையைத் தீர்த்து விட்டால் மீண்டும் கண்களைத் தொட வேண்டாம் பாருங்கள்!'' என்கிறார் டாக்டர் ராமமூர்த்தி.

மகன் சரியான முடிவு எடுத்த சந்தோஷத்தில் இருந்தார் சந்தோஷி குமார்.


* விஷால்குமார் தம் அம்மாவுடன்...


டாக்டர் சித்ரா ராமமூர்த்தி...

**தி**பேத்தியப் பெண்மணி ஸோனம், தன் மகள் ஷிரின் மற்றும் மருமகன் தோர்ஜியோடு வந்திருந்தார். கண் பார்வை மங்கலாகித் தெரிந்ததால் வந்தாராம். பரிசோதித்ததில் விழியின் வெள்ளைப் பாகம் தடித்து, அடியில் சதை வளர்ச்சி தெரிந்தது. ''கிராஃப்ட்டிங் முறையில் வளர்ந்த சதையை எடுத்துவிடுவோம்!'' என்கிறார் டாக்டர் சித்ரா ராமமூர்த்தி. ''என் மாமா இங்கேதான் கண் சிகிச்சை எடுத்துப் பார்வை பெற்றார். அதனால், நம்பிக்கையும், ராசியானதுமான தி ஐ ஃபவுண்டேஷனுக்கு என் அம்மாவை அழைத்து வந்தேன்!'' என்றார் ஷிரின்.

சந்திப்பு : **சாருகேசி**



**ஹா**ஸ்பிட்டல் கேள்விப்பட்டிருப்பீர்கள். மொபைல் ஹாஸ்பிட்டல்? என்ன புதுசா இருக்கா! வாகனத்தில் மருந்து மாத்திரைகளோடும், கூடவே டாக்டர்களோடும் மருத்துவ வசதி இல்லாத கிராமத்துக்குச் சென்று, இலவசமாகச் சிகிச்சை அளிப்பதுதான் மொபைல் ஹாஸ்பிட்டல். கோவை ஈஷா யோகா மையம், முதன் முதலாக, தமிழகம் முழுவதும் 22 மொபைல் ஹாஸ் பிட்டல்களை அறிமுகப்படுத்தி வைத்திருக்கிறது. அதோடு அல்லாமல் தமிழகத்தில் நான்கு இடங்களில் நிரந்தரமான ஹாஸ்பிட்டல்கள் திறந்திருக்கிறார் கள். இந்த ஹாஸ்பிட்டல்களில் மருந்து மாத்திரை கள் உற்பத்தி விலைக்கே வழங் கப்படுவது கூடுதல் சிறப்பு!

**மே**ட்டுப்பாளையத்திலிருந்து நீலகிரி செல்லும் சாலையில் கல்லாற் றின் மீது இருக்கிறது தூரிப்பாலம். கிட் டத்தட்ட ஒரு நூற்றாண்டைக் கடந்து விட்ட தூரிப்பாலம், ஆங்கிலேயர்கள் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்டது. இன் றும் சிறிதளவு கூடத் துரு பிடிக்க வில்லை. கோவை மாவட்டத்தில் சினிமா ஷூட்டிங் என்றால் இந்தப் பாலம் இடம்பெறும். நடிகர் சிவகுமா ரின் இனியொரு சுதந்திரம், ஸ்ரீப்ரியா வின் ஆட்டுக்கார அலமேலு போன்ற பல படங்களில் ஒரு கதாபாத்திர மாகவே வந்தது இப்பாலம்.





**ஆ**னைக்கட்டி சலீம் அலி பறவைகள் ஆராய்ச்சி மையம், கோவையின் வேடந்தாங்கல். பறவைகளைக் கவனித்தல், அவற்றின் வாழ்க்கை முறைகளை ஆராய்ச்சி செய்தல், பள்ளி மாண வர்களுக்கு பறவைகள் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்துதல் போன்றவை இம்மையத்தின் முக்கியமான வேலைகள். ''பறவைன்னா எனக்கு உயிர். என்னோட ஒவ்வொரு பிறந்த நாளுக்கும் இங்கே வருவேன். கரண்ட் கம்பத்துல உட்கார்ந்து ஒன்றுமே ஆகாதது பறவைக்குத்தான். குடும்ப மாகக் கூடிவாழும் பழக்கம் உயிர்களில் முதலில் தோன்றியது பறவை இனத்தில்தான்'' என்கிறார் அருண்.

பகாசூரன், மேட்டுப்பாளையம் தேக்கம்பட்டி வன பத்ரகாளியம்மனின் காவல் தெய்வம். இவன் காவல் தெய்வமானதே சுவாரஸ்யமான கதை. பகாசூரன், மிகப் பெரும் வீரன்; அதே சமயத்தில் கொடூரன். பக்கத்து ஊர் மக்களிடம் உணவுப்பொருட்களை அபகரித்துத் தின்பதோடு, உணவுப் பொருட்களை வண்டியில் கொண்டுவரச் சொல்லித் துன்புறுத்தியும் வந்தான். அப்போது அந்தப் பகுதியில் பாண்டவர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களில் பீமன், பகாசூரனுக்கு உணவு கொண்டு போகும்போது அவனுக்குக் கொடுக்காமல் தின்றுவிடுகிறான். இதனால், கோபமுற்ற பகாசூரன், பீமனோடு சண்டையிடும்போது, காளியின் அருள் பெற்ற பீமன், பகாசூரனை அடித்து வீழ்த்திவிடுகிறான். அப்போது பகாசூரன், காளியை வேண்டினான். அவளும் தன் காவல் தெய்வமாக பகாசூரனை அங்கீகரித்தாள்.



ஆசியாவிலேயே மிக உயரமான பிள்ளையார் என்ற பெருமையோடு வீற்றிருந்தது பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார் புலியங்குளம் விநாயகர். ''எங்க அண்ணனுக்கு மூணு வருஷமா கிட்னி கோளாறு. புலியங்குளம் விநாயகர்கிட்ட நான்தான் வேண்டிக்கிட்டேன். நேத்து அண்ணனுக்கு நல்லபடியா ஆபரேஷன் முடிஞ்சுடுச்சு. இனி பயமில்லைன்னு டாக்டர் சொல்லிட்டார். என் வேண்டுதலைக் கேட்ட விநாயகருக்கு பூஜை பண்ணலாம்னு வந்திருக்கேன்' என்கிறார் மாலதி.

நியூஸ் ஏந்தி பவன்



# பெரியாருக்கு கேரவேன்!

கேரவேன் புழக்கத்தில் இல்லாத கால கட்டத்திலேயே தந்தை பெரியாருக்கு கேரவேனை வடிவமைத்துக் கொடுத்திருக்கிறார் விஞ்ஞானி ஜி.டி.நாயுடு. எம்.ஆர்.ராதா, கேட்டுக் கொண்டதால் இதை வடிவமைத்தாராம் நாயுடு. கோவை அவிநாசி சாலையிலுள்ள ஜி.டி.நாயுடு அருங்காட்சியகத்தில் பெரியாரின் கேரவேன் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கிறது. கூடவே, ஜி.டி.நாயுடு, உருவாக்கிப் புழக்கத்தில்விட்ட டவுன்பஸ், துருப்பிடிக்காத பிளேடு, தாமஸ் ஆல்வா எடிசனின் ஒலிப்பதிவு செய்யப்பட்ட குரல்... ஆகியவை இருக்கின்றன. கோவைக்குக் குழந்தைகளோடு சென்று பார்க்க வேண்டிய இடம் இது!



இவன்
கனவைக்
கூட
ஆடுகள்
தான்
மேயுமோ?








பயம் ஒரு போதிமரம்... அதன்
கிளைகள் ஞானம் தரும்!





ஓவியர் சின்னராஜ்

ஒழுகும்
கூரைக்கு ஒத்த
ஓலை
கிடைக்குமா?

தண்ணீர்
இனிது.
உழைத்தபின்
பருகும்
தண்ணீர்
அதனினும்
இனிது!



ஓடம்போல
கவிழ்ந்து
கிடக்கிற
வாழ்க்கை
என்றைக்கு
நிமிர
போகுதோ?

# உழைப்பின் தாகம்!





கக்கத்தில் பிள்ளை... கையில் கருக்கரிவாள்...
சத்தியமா புல்லறுக்கத்தான் போறாங்க

# இயற்கையின் மடியில் உதயமாகிறது இனிய இல்லங்கள்



கோவை பிராப்பர்ட்டி சென்டர், வாடிக்கையாளர்களி கனவுகளையும், கலை நுணுக்கங்களையும் தெளிவாக உணர்ந் இல்லங்களை வடிவமைக்கும் கட்டிடக்கலை நிபுணத்துவ பெற்றவர்கள்.

எங்கள் படைப்புகள் இயற்கை சூழலில் அமைந்தவை. எங்க நோக்கமும், பாரம்பரியமும் வாடிக்கையாளர்களா போற்றப்பட்டுவந்தவை. மேலும் எங்கள் படைப்புகளா அபார்ட்மெண்ட்கள், வியாபார கட்டிடங்கள், ஓய்வுகால குடியிருப்புக போன்றவை அழகு மிளிரும் அடையாளச் சின்னங்கள் கோவையி நிலையான அடையாளத்தை உருவாக்கி வாடிக்கையாளர்களி இதயத்தில் இடம் பிடித்துள்ளது.

## COMFORT & RETIREMENT HOMES



கோவை பிராப்பர்ட்டி சென்டர், சௌந்தர்யம், சந்தோஷம் மற்றும் செண்பகம் எஸ்டேட்ஸ் ஆகிய ஒருங்கிணைந்த ஓய்வுகால குடியிருப்புகளை உலகத்தரத்திற்கு ஏற்ப அனைத்து அடிப்படை வசதிகளுடன் அமைத்து தனக்கென்று ஒரு தனி முத்திரையை பதித்துள்ளது.

**Soundaryam** is self-contained with all infrastructure including black topped roads, sewage treatme and recycling plant, water softening plant, drainage, electricity including UPS/Stand by Generator, 24 security, a modern Recreation Centre with a lounge, dining room, modern kitchen with steam cooki arrangements, a medical centre with ambulance and emergency medical facilities, shopping centr Solar Street Lights, Open Air Theatre, Activity Centre etc. Besides, one will get the services of hou maids, gardener, transport arrangements etc.

**Soundaryam Extension**, as the name suggests, is the extension of Soundaryam Comfort a Retirement Homes and will have **37 villas** ranging from 1000 to 1600 sq ft. These are two/thr bedroom villas, exquisitely designed to meet the requirements of senior citizens. The comm amenities of Soundaryam will be shared by these residents.

## COMMERCIAL COMPLEX

**ACHAL'S**
**A R C A D E**

**ACHAL'S ARCADE** is a commercial complex of our Gat Community Project named GEM Nirmaalayam at Ganapath Coimbatore. It has independent access for other neighbouri locality people to enter and exit.



**Salient Features:**

- In the midst of residential localities. No other commerci complex in the vicinity
- KGISL SEZ at Saravanampatty only 5 Kms away. Large number of residents work in KGISL SEZ live in GEM Nirmaalayam
- 15 mins to reach Avinashi Road, 3 kms from Gandhipuram
- Four floors with each Floor about 3700 sq ft
- Ideal for Offices (Walk to Work), Back Offices, Departm Store, Bank, BPO, Poly Clinic, Educational Institutions e

என்னோட நண்பர் மாதப்பன் சொன்னது இது.

கோயமுத்தூர் ஃபாரஸ்ட் காலேஜுல ட்ரெயினிங்ல அவரு இருந்தப்போ நடந்ததாம்.

ட்ரெயினிங்ல ரொம்பப் பாடங்கள் இருக்கும். எல்லாக் காட்டுக்கும் இந்தியா முச்சூடும் போகோணும். முக்காவாசி ப்ராக்டிக்கல்ஸ்தான் அதிகம் இருக்கும்.

பல சப்ஜெக்ட்ல, ஃபாரஸ்ட் இன்ஜினியரிங்கும் ஒண்ணு. ஃபாரஸ்டுக்குள்ளாற கட்டற குவார்ட்டர்ஸுங்க, ரெஸ்ட் ஹவுசுங்க மாதிரியான கட்டடங்களுக்கு எஸ்டிமேட் தயார் பண்ணுறதிலேருந்து கட்டடம் கட்டி முடிக்கிற வரையிலுமான அத்தனை வேலைகளுக்குமான ட்ரெயினிங். சுருக்கமாச் சொன்னா சிவில் இஞ்ஜினியர் பண்ணுற அத்தனை வேலைகளும் தெரிஞ்சிருக்கோணும்.

மாதப்பன் மத்த பதினாறு சப்ஜெக்ட்லேயும் கில்லாடி. இந்த இன்ஜினியரிங் மட்டும் கொறக்கலி பண்ணும். காரணம் இவரு காலேஜுல படிச்ச படிப்பு மரஞ்செடிகொடி! இன்ஜினியரிங்ல ஃபார்முலாக்களும், கால்குலேஷன்களும் லேசா அஜீரணத்த ஏற்படுத்திடும்.

அப்ப இவரோட க்ளோஸ் ஃபிரண்ட்ஸ் நாலஞ்சு பேரு ஒரு ஐடியா பண்ணுனாங்க.

பாட்டனி, சில்விக் கல்ச்சர், ஃபாரஸ்ட்லா இது மாதிரி சப்ஜெக்டல்லாம் மாதப்பன் மத்தவிங்களுக்குச் சொல்லிக்குடுத்துப் போடறது. பதிலுக்கு தனராஜு (இவரு சிவில் இன்ஜினியரிங் முடிச்சிட்டு வனத்துறை வேலைக்கு வந்தவரு) இன்ஜினியரிங் சொல்லிக் குடுத்தர்றது.

மாதப்பன் சூப்பரா சொல்லித் தருவார். தனராஜும் முடிஞ்ச அளவு சொல்லித் தருவார். ஆனாலும் மாதப்பனுக்குத் தூக்கம் வந்திரும். பாதில முழிச்சு எந்திரிச்சு, 'மொதல்லருந்து சொல்லு'ங்குவாரு.

தனராஜும் பல்லக் கடிச்சுக்கிட்டு மறுக்காவும் ட்ரை பண்ணுவாரு.

சரி! மெயின் ஸ்டோரிக்கு வரலாம். இன்ஜினியரிங் புரியறதுக்குள்ள மாதப்பனுக்கு நாக்கு வறண்டு போயிடும். சொல்லிக் குடுக்கிற தனராஜுக்கு நாக்குல நொர தள்ளிடும்.

கேம்ப் போகாம தியரி க்ளாஸ் இருக்குற அன்னைக்கெல்லாம் ட்ரெயினிங் பசங்க கொத்துக்கொத்தாய் சாய்பாபா காலனி போயிருவாங்க. ஒரு பென்சில் வாங்கோணும்னாலும்



# கணக்காம்பரமும்

நாலஞ்சு பேரு போயி ஷாப்பிங் பண்ணுவாங்க. ஏன்னா அங்கதான் பொண்ணுங்களையும் பார்க்கலாம்.

மாதப்பன்கிட்ட ஒரு விசித்திர வழக்கம். தனியா ஏதாவது பொண்ணு வந்தா நைசா கிட்டப் போயி, 'எக்ஸ்க்யூஸ் மீ! நீங்க குமாரோட சிஸ்டர்தானே?'னு பேச்சை ஆரம்பிப்பாரு. மொறைச்சா 'ஸாரி

# மல்லிப்பூவும்!

**லதானந்த்**

சிஸ்டர்' அப்படினு சொல்லிட்டு அடுத்த கேஸைக் கவனிக்க ஆரம்பிச்சுருவார். லேசாச் சிரிச்சு, 'எந்தக் குமார்?'னு கேட்டுப் போட்டுதுன்னு வெச்சுக்குங்க. அவ்வளவுதான்.

அப்படித்தான் அன்னைக்குச் சாயங்காலம் ஸ்கேல் ஒண்ணு வாங்குறதுக்காக சாய்பாபா காலனில சுத்திக்கிட்டிருந்தாங்க. அழகான பொண்ணு ஒண்ணு புஸ்தகக் கடைல தனியா என்னமோ வாங்கிட்டு இருக்குது.

மாதப்பன் இயல்புக்கு மாறா அமைதியா நிக்குறாரு.

தனராஜு கேக்குறார்.

''ஏனுங்க! கெவுனிக்காம இருக்கீங்க?''

''தனுக! பாப்பா தனியா வர்ல. பெரிய கூட்டமே கூட வந்திருக்கு.''

''எப்படிங்க மாதப்பன் சொல்றீங்க?''

''பக்கத்தில இருக்கிற பாத்திரக் கடைல ஏழெட்டுப் பொம்பளைங்க வந்திருக்காங்க பாருங்க. அவங்களோடதான் இவளும் வந்திருக்கா.''

''எப்படிச் சொல்றீங்க?''

''பாத்திரக் கடைல இருக்கிற பீப்பாய்ங்க அத்தனை பேரு தலைலயும் கனகாம்பரமும் மல்லிப்பூவும் இருக்கு.




பக்கத்தில இருக்கிற பொஸ்தகக் கடைல இருக்கிற பொண்ணு தலைலயும் அதேதான் இருக்கு. அட! பாத்தீங்களா? பாப்பா, பீப்பாய்ங்களோட ஐக்கியமாயிருச்சு!''

தனராஜு முணுமுணுத்தார். ''இதுல காமிக்கிற அறிவுல ஒரு பர்சன்ட் இன்ஜினியரிங்ல காமிச்சிருந்தா என் தலைவலி தீர்ந்திருக்குமே!''

●




''மல்ட்டி மீடியா துறையில் பொருளாதாரச் சரிவு என்ற பாதிப்பு இல்லை. பிரின்ட் மீடியா, அட்வர்டைஸ்மென்ட், டி.வி., சினிமா - இவையும் ''பாதிக்கப்பட வில்லை'' என்கிறார் Atom Systems Pvt., Ltd., நிறுவனத்தின் சி.இ.ஓ. மதன் மோகன்(28).

நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் ராஜ்கிருஷ்ணா (32) மற்றும் நிறுவனர் கிருஷ்ணா பிரதீப் (27).

இந்த இளைஞர் கூட்டணிதான் ஆட்டம் சிஸ்டம்ஸ் நிறுவனத்தின் அச்சாணிகள். பார்க்க ஏதோ கல்லூரிப் பிள்ளைகள் மாதிரி தெரிந்தாலும், ஒரு நிமிடத்தைக்கூட வீணடிக்காத படு சீரியஸ் புள்ளிகள்.

**இங்கு மாணவர்களுக்கு ஸ்ட்ரிக்ட் சிலபஸ் என்று எதுவும் இல்லை.**


* ராஜ் கிருஷ்ணா


* மதன் மோகன்


* கிருஷ்ணா பிரதீப்

மல்ட்டிமீடியா துறையில் ஆர்வமுள்ள மாணவ - மாணவிகளுக்கு ஒரு வருடப் பயிற்சி கொடுத்து, ACMM (ஆட்டம் சர்ட்டிஃபைடு மாஸ்டர் மைன்ட் இன் மல்ட்டி மீடியா) பட்டம் கொடுத்து வேலைக்குத் தயார் பண்ணிவிடுகிறார்கள். 2-D, 3-D, விஷுவல் எஃபெக்ட்ஸ், கிராஃபிக்ஸ் ஸ்பெஷலிஸ்ட், பிரின்ட் ஸ்பெஷலிஸ்ட் என்று மூன்று மாத, ஆறு மாத கோர்ஸ்கள் எது படித்தாலும் வேலை நிச்சயம்!

பார்ட் டைமாக வேலை செய்ய விரும்புகிறவர்கள், வீட்டிலிருக்கும் பெண்கள், இதில் சேர்ந்து பயிற்சி பெறலாம்.

''இங்கு மாணவர்களுக்கு ஸ்ட்ரிக்ட் சிலபஸ் என்று எதுவும் இல்லை. அவர்கள் என்ன படிக்க வேண்டும் என்று நினைக்கிறார்களோ, அந்தத் துறைக்கு சம்பந்தப்பட்ட 'சிலபஸ்'களைத் தயாரித்து கொடுக்கிறோம்'' என்கிறார் பிரதீப்.

### பயிற்சி எப்படி?

''தொழில்நுட்பம் இந்தத் துறையில் தினமும் வளர்ந்துகொண்டே இருக்கிறது. எனவே டெக்னாலஜி அப்கிரேடேஷன் மிகவும் முக்கியம். மௌசுக்குப் பதிலாக டிஜிடல் வேக்கம் பென் டேப்லட் (wacom pen tablet) உபயோகம்! நமக்கு சின்ன வயசு முதல் பேனா பிடித்து எழுதித்தானே பழக்கம்? எனவே பழகினால் இது ரொம்ப

# ஆஹா... Atom...



எளிதாக இருக்கும். கற்பனைக்குத் தகுந்த மாதிரி அநாயாசமாக வரைய லாம்! ஓவிய மனப்பாங்கு உள்ளவர் களுக்கு இது வசதியாக இருக்கும்.

எல்லாமே தனிப்பட்டதாக, வித்தியாசமானதாக அதிக ஆதாயம் உள்ளதாக இருக்க வேண்டும். இங்கு பயிற்சியளிப்பவர்கள் அடோப் சான்றிதழ் பெற்ற நிபுணர்கள். எனவே பயிற்சியின் தரம் நிரந்தரம்.''

*வேலை வாய்ப்புகள் எப்படி?*

''150க்கு மேற்பட்ட நிறுவனங்களும் மல்ட்டி மீடியா சேவை தேவைப்படும் சிறு நிறுவனங்களும் கோவையில் உள் ளன. எனவே வேலை வாய்ப்புகளுக்கு இங்கே பஞ்சமில்லை. பயிற்சி கொடுக்கும் போது, கூடவே தன்னம்பிக்கையையும் சேர்த்தே கொடுக்கிறோம்!''

*சென்னையிலுள்ள பிரபல மல்ட்டி மீடியாவுடன் சேர்ந்து, ஃப்ரான்சைஸி (Franchise) முறையில் செயல்படலாமே?*

ATOM

''ஃப்ரான்சைஸி ஆக இருந்தால் நம் விருப்பம்போல் செயல்பட முடியாது. நிறைய கட்டுப்பாடுகள் இருக்கும்.

அதுவே, நம்முடைய சொந்த 'பிராண்ட்' என்ற உணர்வு இருந்தால், நம்முடைய ஈடுபாடும் அதிகமாகும். முடிவுகளை எல்லாம் நாமாகவே வசதியாக எடுத்துக் கொள்ளலாம். எதையும் விரைந்து செயல்படுத்த இது உதவும்!'' என்கிறார் மதன் மோகன்.

***பயிற்சி முறைகள்?***

''திங்கள் முதல் வெள்ளி வரை படிப்பு. சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் பிராக்டிஸ் செய்து பார்க்க மாணவர்கள் பயிற்சிக்கு வருகிறார்கள்.

ஒரு வருட கோர்ஸை நான்கு பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவின் முடிவின்போதும் ப்ராஜெக்ட் வொர்க் செய்யச் சொல்லி ஊக்குவிக்கிறோம்.

தொழில் துறையில் உள்ளவர்களே இங்கு வந்து அவர்களை எடை போடுகிறார்கள். அதாவது 'இவால்யுவேட்' செய்கிறார்கள். பயிற்சிக்கான அளவுகோல்கள் வேறு; இண்டஸ்ட்ரிக்குத் தேவையான அளவுகோல்கள் வேறு; இதற்குப் பிறகு மாணவர் 'வைவா' தேர்வுக்குப் போக வேண்டும்.

இந்த சாஃப்ட்வேர் துறையில் அவ்வப்போது 'அப்டேட்' செய்து கொண்டே இருக்க வேண்டும். அதனால், ரீ-கோர்ஸ் செய்ய விரும்பும் மாணவர்களை இலவசமாக, வகுப்புகளில் பங்கு கொள்ளச் செய்கிறோம். சமீபத்தில் 'டைம்ஸ் நவ்' டீ.வியிலிருந்து டீம் ஹெட் பிரகாஷ் பம்பாயிலிருந்து வந்து மாணவர்களிடம் பேசினார். மிகவும் பயனுள்ள வகுப்பு அது. அதேபோல் திரைத் துறையிலுள்ள உதவி இயக்குனர் திரு.மனோஜ் மாணவர்களிடம் பேசினார். இவை எல்லாம் மாணவர்களுக்கு உற்சாகமும், தன்னம்பிக்கையும் தருபவை!'' என்கிறார் ராஜ்கிருஷ்ணன்.



சந்திப்பு : **சாருகேசி**

**(BPO-பயிற்சி / வேலை வாய்ப்பு அடுத்த வாரம்!)**

**தொடர்புக்கு :**

Natesh Complex No.458 & 462,
100 Feet Road, Gandhipuram,
Coimbatore - 12
Email:admin@atomsystems.in
Ph:0422 2526662 / 97915 99900



''கல்யாணத்துக்குப் போய்ட்டு வந்தேங்கறதைச் சொல்லாமலே என் மனைவி கண்டுபிடிச்சுடுவா!''

''எதை வெச்சு?''

''புது செருப்பை வெச்சுதான்.''

''போருக்குப் போனால் என்ன நடக்கும் மன்னா?''

''நடப்பதற்கு எங்கே நேரம்... ஓட்டம்தான்.''

- சி.சாமிநாதன்



- வாழை இலை வறுவல்
- கரும்புச் சக்கை சூப்
- மக்காச்சோளம் புலாவ்
- பலாப்பழ பாயசம்
- மாவிலைக் கூழ்

இந்த உணவு ஐட்டமெல்லாம் எங்கே கிடைக்கிறது? விரைவில் முதுமலை, டாப்ஸ்லிப் மற்றும் வன இலாக்காவின் வேறு பல யானைகள் முகாம்களில், இதுபோன்ற உணவு வகைகளைத் தயாரிக்க வேண்டிய அவசியம் வரலாம். என்ன குழப்பமாக இருக்கிறதா? கிட்டத்தட்ட 35 வருடங்களாகக் காட்டுச் சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கும் வனஇலாக்கா ரேஞ்சர் தங்கராஜ் பன்னீர்செல்வம் சொல்வதைக் கேட்டால் புரியும்! அதற்கு முன், பிரச்னை என்னவென்று பார்ப்போம்.

கோயமுத்தூர் சுற்றுவட்டாரங்களில், யானைகள் ஊருக்குள் வந்து தோட்டங்களை அதகளம் செய்வதும், துரத்தும் மக்களை அட்டாக் செய்வதும் ரொம்ப சகஜம்.



மேட்டுப்பாளையம் அருகிலுள்ள கல்லாறு, நெல்லித்துறை, வால்பாறை அருகிலுள்ள பன்னிமடை, வெள்ளியங்கிரி, பொள்ளாச்சி பக்கம் ஈச்சநாரி, கணுவாய் போன்ற மேற்குத் தொடர்ச்சி மலையை ஒட்டியுள்ள கிராமங்களில் சமீபகாலமாக யானைகளின் அட்டகாசம் மிக அதிகமாகிவிட்டது.

''சமீபத்தில் பேரூர் பச்சாபாளையத்தில் புகுந்தன யானைகள். கரும்பு, வாழை, மக்காச்சோளம் பயிர்களைத் துவம்சம் செய்தன. இந்தக் கிராமத்தை அடுத்து ஒரு பொறியியல் கல்லூரி துவக்கப்பட்டுள்ளது. மூன்று பக்கமும் அமைக்கப்பட்ட அதன் மதில்சுவர்கள், யானைகள் வழக்கமாகச் செல்லும் பாதையின் குறுக்கே நிற்பதால்தான், யானைகள் வழி மாறி விளைநிலங்களில் அதகளம் செய்கின்றன என்பது வனத்துறையினர் கருத்து'' என்கிறார் **கல்கி வாசகர் ரத்னம்**. காட்டுத் தீ காரணமாகவும் யானைகள் இடம்மாறி ஊருக்குள் வருகின்றன என்கிறார்கள். பயிர்களை யானைகளிடம் இருந்து பாதுகாக்க, குறிப்பிட்ட சக்திக்கு உட்பட்டு மின்



**ஊருக்குள் ஊடுருவும் யானைகளை மீண்டும் காட்டுக்குள் துரத்த பயிற்சியளிக்கப்பட்ட யானைகளை வன இலாக்கா பராமரிக்கிறது. இந்த யானைகளுக்கு 'கும்கி'கள் என்று பெயர். இந்த கும்கி யானைகளுக்கு கட்டளையெல்லாம் உருது மொழியில்தானாம்.**

வேலிகளை அமைத்துக் கொள்ளலாம் என்று வனத்துறை அனுமதி கொடுத்துள்ளது. ஆனால், சில விவசாயிகள் உயர் அழுத்த மின்சாரத்தை கனெக்ஷன் கொடுத்து விடுகிறார்கள். யானைகள் இதுபோன்ற மின் வேலிகளில் மாட்டிக் கொண்டு இறந்த சம்பவங்களும் சமீபத்தில் நடந்திருக்கின்றன.

''காட்டில் இருக்கும் யானைகளுக்குத் தேவையான உணவும், தண்ணீரும்,வருடம் முழுவதும் எங்கு கிடைக்கும் என்று தெரியும். அவை ஊருக்குள் வர வேண்டிய அவசியமில்லை. பிறகேன் வருகின்றன? யானைகளுக்கு ஒருநாளைய உணவுத் தேவை சுமார் 250 கிலோ. இலை, தழை, புல், மரப்பட்டை, பழங்கள் முதலியவற்றைத் தேடிச் சாப்பிட காட்டில் சுமார் பத்து சதுர கிலோ மீட்டருக்கு அது அலைய வேண்டியிருக்கும். இதைவிட 'சுவையான' உணவு வனப்பகுதியை ஒட்டிய கிராமங்களில் போடப்பட்டிருக்கும் வாழைத் தோட்டத்திலும், கரும்புக் கொல்லையிலும் யானைகளுக்கு 'ஃபாஸ்ட் புட்' ஆகக் கிடைக்கிறது! எங்கும் அலையவேண்டிய அவசியமில்லாமல் ஒரே இடத்தில் தமக்குத் தேவையான (ருசியான) உணவு கிடைக்கும்போது, யானைகள் அவற்றைத் தேடி வருவதில் ஆச்சர்யம் என்ன? முன்பெல்லாம், காடுகளுக்கும், ஊர்களுக்கும் நல்ல இடைவெளி இருந்தது. இப்போது அதுவும் இல்லை. எனவே, சுலபமாகக் கிடைக்கும் இந்தச் சுவைக்குப் பழகிப்போகும் யானைகள் மெள்ள 'சோம்பேறிகள்' ஆகிவிடுகின்றன!'' என்கிறார் தங்கராஜ் பன்னீர் செல்வம்!



**"யானைகள் ஊருக்குள் வராமலிருக்க மின்வேலி அமைப்பதைவிட, உயிர்வேலி அமைப்பது சிறந்தது"**

''யானைகள் ஊருக்குள் வராமலிருக்க மின்வேலி அமைப்பதைவிட, உயிர் வேலி அமைப்பது சிறந்தது. வேலிகாத்தான், மற்றும் கள்ளிச் செடிகளை வேலியாக வளர்த்து விடவேண்டும். முட்கள் இருக்கும் தாவரங்களைப் பார்த்தால் யானைகள் விலகிப் போய்விடும்'' என்கிறார் தங்கராஜ். ●

# காரமடையான் கருணை!




● காரமடை ரங்கநாதர் கோயில், கொங்கு நாட்டின் புகழ்பெற்ற வைணவத் தலம். ● காரை மரங்களும், நீர்ப்பெருக்குடைய மடைகளும் நிறைந்த காரணத்தால் காரை வனம், காரைமடை என்று பெயர். ● கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் சாலையில் 29 கி.மீ.; மேட்டுப்பாளையத்திலிருந்து ஏழு கி.மீ. ● மூலவர் அரங்கவெங்கடேச அச்சுதன்; உத்ஸவர் வெங்கடேசப் பெருமாள். ● மூலவர் சுயம்புவாக கிழக்கு நோக்கி, சயனக்கோலத்தில் காட்சி தருகிறார். உத்ஸவர் ஸ்ரீதேவி, பூதேவி சமேதரராய், ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள். ● ஸ்ரீராமானுஜர், மேல்கோட்டை செல்லும்போது இங்கு தங்கிவிட்டுச் சென்றதாகக் கூறப்படுகிறது. ● பிரம்மனால் உண்டாக்கப்பட்ட பிரம்ம தீர்த்தம், கர்ப்பகிரஹத்துக்குப் பின்புறம் உள்ளது. கருடபகவானால் உண்டாக்கப்பட்ட கருட தீர்த்தம் இப்போது தெப்பக்குளமாக உள்ளது. ● ஸ்தல விருட்சம் காரைமரம். ● பெருமாள் வெளிப்பட்ட மாசிமாதம் கிருஷ்ணபட்சத்தில், ஹஸ்தம் நட்சத்திரத்தை ஒட்டியே இக்கோயிலின் தேர்த்திருவிழா. தேர்த்திரு விழாவின் ஐந்தாம் நாள் திருக்கல்யாண உத்ஸவம். பெருமாளின் அவதார தினத்தில், தீர்த்தவாரி உத்ஸவமும் உண்டு. ● இக்கோயிலுக்கு இடையூறாக ரயில்பாதை அமைத்த வெள்ளைக்கார என்ஜினியரை, அவரது கனவில் தோன்றிய பெருமாள் சாட்டையால் அடித்தாராம். அதன்பிறகு அவர் மனம்மாறி, பாதையை வேறுவழியில் மாற்றி அமைத்ததோடு ஒரு வெள்ளை மரக்குதிரையையும் கோயிலுக்கு அன்பளிப்பாக அளித்தாராம். உற்சவ மூர்த்தி, அந்த வெள்ளைக்குதிரையில்தான் பரிவேட்டை உற்சவத்துக்குப் புறப்படுகிறார். ● பாஞ்சராத்ர ஆகம முறைபடி, ஆராதனைகள் நடைபெறுகின்றன. காலை 8.30 மணிக்கு காலசந்தி; பகல் 12.30மணிக்கு உச்சிக்காலம்; இரவு 8.30 மணிக்கு இரவு நேர ஆராதனை. உத்ஸவ காலத்தில் சிறப்பு ஆராதனைகள் உண்டு. ● இப்பெருமாளிடம் வேண்டித்தான் திருமலை நாயக்கரின் ராஜபிளவை நோய் நீங்கிற்று. மருந்து, காரைமரத்தின் இலைகள். ● கரிகாற்சோழனின் போற்றுதலுக்குரிய தெய்வமாக காரைமடையான் விளங்கியிருப்பதை, அவன் அளித்த செப்பேடுகள் மூலம் அறியலாம்.

வாசகர் யோசனை : உமார்த்தி

# மேயரோடு நேருக்கு நேர்

# கொசுக்களின்

கோவை மாநகர மேயர் வெங்கடா சலத்தோடு மாநகரப் பிரச்னைகளைப் பேசுகிறார்கள் கல்கி வாசகர்கள் மகாலட்சுமி, பூங்கோதை, ரமா வெங்கட். இதோ சூடான விவாதம்...

**மகாலட்சுமி :** என்ன ஸார் அநியாயமா இருக்கு. தமிழ்நாட்டிலேயே பெரிய நகரம். தொழிற்சாலைகள் நிறைந்த நகரம். இப்படிப் பெயர் பெற்ற நமது நகரம் நாறுகிறது. சாலையில் மூக்கைப் பிடித்துக் கொண்டுதான் போகவேண்டும். காரணம் டாய்லெட் கழிவை அப்படியே மழைநீர் கால்வாயில் கலந்துவிடுகிறார்கள். இதனால் கொசுக்களின் சாம்ராஜ்யம். கார்ப்பரேஷன் கண்டுகொள்வதே கிடையாது. காந்திபுரம், டாடாபாத்தில் இந்த அக்கிரமம் நிறையவே நடக்குது.





**மேயர் :** நாங்க எவ்வளவோ நோட்டீஸ் கொடுக்கிறோம். அப்படி கழிவுகளை மழைநீர் கால்வாயில் விடுபவர்களுக்கு அபராதம் போடுகிறோம். அந்த முறையற்ற கனெக்ஷனை மூடுகிறோம். பாதாளச் சாக்கடையில் கனெக்ஷன் கொடுங்க என்று நோட்டீஸ் கொடுக்கிறோம். கனெக்ஷன் கட்டணத்தால் மாநகராட்சிக்கு வருமானம் 40 கோடிகள் என்றபோதிலும் நாங்கள் செய்யும் பணிகளின் மதிப்பு 80 கோடிகள்.

**ரமா வெங்கட் :** இந்த மாதிரி கழிவுகளை மழைநீர் கால்வாயுடன் கலந்தால் ஐம்பது ரூபாய்தான் அபராதம் என்றிருந்தது. நாங்கள்தான் சென்னை கோட்டை வரை போராடி அதை ஆயிரமாக உயர்த்தினோம். ஆனால் இதுவரை ஒருவரிடமிருந்துகூட ஆயிரம் ரூபாய் அபராதம் வசூலிக்கப்படவில்லையே?

(இந்தக் கேள்விக்கு நேரடியாகப் பதிலளிக்காமல் கீழ்கண்டவாறு விவாதத்தை மாற்றுகிறார் மேயர்)

**மேயர் :** மற்ற சில நகராட்சிகளில் செய்தது போல் மக்களிடம் முன் பணம் வசூல் செய்து இந்தப் பாதாளச் சாக்கடை திட்டத்தை நிறைவேற்றியிருந்தால் எல்லோரும் பணம் கொடுத்திருப்பார்கள். இயல்பாகவே திட்ட வேலை முடிந்தவுடன் எல்லா வீடுகளுக்கும் கனெக்ஷன் கொடுக்கப்பட்டிருக்கும். இனி கட்ட

ணத்தை சற்றுக் குறைத்து இந்த வசதியை விஸ்தரிப்பதைத் தவிர வேறு வழியில்லை.

**பூங்கோதை :** கோவையில் எங்கு நோக்கினும் குப்பைகள்தான். 1990விருந்து பார்த்தால் எங்களிடம் வசூல் செய்யும் சொத்துவரி இரண்டு மடங்கு அதிகமாகி யிருக்கிறது. மாநகராட்சிக்குக் குப்பை களை அள்ளுவதில் என்னதான் பிரச்னை?

**மேயர் :** குப்பை அள்ளும் ஊழியர்கள் 1100 பேர்கள் இருக்கிறார்கள். இதற்கு

**மேயர் :** செய்யலாம். அ.தி.மு.க. மற்றும் அதன் கூட்டணிக் கட்சிகள் எதிர்க் கின்றன. பாராளுமன்றத் தேர்தலுக்குப் பிறகு ஒரு வழி பிறக்கும்.

**மகாலட்சுமி :** ஜவாஹர்லால் நேரு நகர்ப்புற வளர்ச்சித் திட்டத்தின் கீழ் ஆயிரக்கணக்கான கோடிகளை கோவைக்கு ஒதுக்கியிருக்கிறார்களே!

**மேயர் :** உண்மைதான். வில்லூரி லிருந்து கூடுதல் குடிதண்ணீர் வசதி செய்துகொடுக்க கணிச மாகப் பணம் ஒதுக்கி யிருக்கிறோம். 3600 கோடி ரூபாய், இந்தத் திட்டப்படி கோவைக்கு ஒதுக்கப்பட்டாலும் மாநகராட்சிக்கு ஒரு பைசா நேரடியாகக் கிடைக்காது. அந்தந்தத் திட்டங்களுக்கு பணம் நேரடியாகச் சென்று விடும். குடிசைகளை கட்டடங்களாக மாற்றும் திட்டமும் இதில் அடக் கம். உள்ளாட்சித் துறை அமைச்சர் கோவைக்கு



# தலைநகரமா கோவை?

மேலும் ஆட்களை எடுக்கத் தடை இருக் கிறது. எனவே, 'பத்லி' என்ற தற்காலிக முறையில்தான் ஆட்களை எடுக்க முடி கிறது. ஆனால் 'பத்லி' ஆளுக்கு ஆயிரம் ரூபாய்தான் மொத்த சம்பளம். எனவே, பத்லிக்கும் ஆட்கள் கிடைப்பதில்லை.

**மகாலட்சுமி :** இப்போது பல பெரிய நகரங்களில் குப்பை அள்ளுவதை தனி யாருக்கு விட்டுவிடுகிறார்களே?

உதவி செய்வதில் மிகவும் தாராளமாக இருக்கிறார்.

**ரமா வெங்கட் :** இதுபோன்ற நிதியைப் பயன்படுத்தி கோவையை நன்றாகவே டெவலப் செய்யலாம். உதாரணமாக மேட்டுப்பாளையத்திலிருந்த சங்கனூர் பள்ளம் வழியாக வட்டச் சாலை போட்டால் ஊட்டியிலிருந்து வருபவர்கள் நகருக்குள் நுழையாமல் விமான நிலையத்

துக்கு விரைவாகச் செல்லலாம். இந்தத் திட்டத்தில் ஏன் தாமதம்?

**மேயர் :** நிலம் ஆர்ஜிதப்படுத்த வேண்டியிருக்கிறது. நீதிமன்றத்துக்குப் போய் விடுகிறார்கள். விவகாரம் இழுத்துக்கொண்டே போகிறது.

**மகாலட்சுமி :** நிரஞ்சன் மார்டி கமிஷனராக இருந்தபோது, இதுபோன்ற வளர்ச்சித் திட்டங்களுக்கு நீதிமன்றம் போய் யாராவது முட்டுக்கட்டை போட்டால் அவர்கள் தடையேதும் வாங்க முடியாத வகையில் புத்திசாலித்தனமாக செயல்படுவார்கள். அந்த காலம் கோவையின் பொற்காலம்.

**மேயர் :** பொதுமக்கள் ஒத்துழைப்பு இல்லாவிட்டால் எந்தத் திட்டத்தையும் செயல்படுத்த முடியாது என்பதே உண்மை.

**ரமா வெங்கட் :** வளர்ச்சித் திட்டங்களுக்கு நீங்கள் சொல்வது சரி. ஆனால், சாதாரண வேலைகளைக்கூட மாநகராட்சி செய்யவில்லையே. உதாரணமாக, மழை பெய்தால் கோவையிலுள்ள இரண்டு மேம்பாலங்களை அணுகும் சாலைகளில் முழங்கால் அளவு தண்ணீர் தேங்கிவிடுகிறது. பல்லாண்டுகளாக இந்தப் பிரச்னை நீடிக்கிறது.

**மேயர் :** இதுபோன்ற சமயங்களில் நானே அந்த இடங்களுக்குச் சென்று தேவையான நடவடிக்கைகளை எடுத்து வருகிறேன்.

**பூங்கோதை :** டாடாபாத் அருகிலுள்ள உணவுக் கழகத்துக்கு வரும் லாரிகளை, டாடாபாத் தெருக்களில் கன்னாபின்னாவென்று நிறுத்தி விடுகிறார்கள். அந்த லாரிகளை உணவுக் கழக வளாகத்தில் நிறுத்தலாமே?

**மேயர் :** அந்தக் காலத்தில் நகருக்கு வெளிப்புறமாக அமைக்கப்பட்டன இந்த உணவுக் கிடங்குகள். இப்போது அதைச் சுற்றி நகரம் வளர்ந்துவிட்டது. இந்த உணவுக் கிடங்குகளை, பீளமேடு பக்கம் கொண்டு செல்லும் யோசனை இருக்கிறது.



**பொதுமக்கள் ஒத்துழைப்பு இல்லாவிட்டால் எந்தத் திட்டத்தையும் செயல்படுத்த முடியாது**

**மகாலட்சுமி :** சாலையை வருடா வருடம் புதிதாகப் போடுகிறோம் என்ற பெயரில் உயர்த்திக் கொண்டே போகிறீர்கள். வீடுகளெல்லாம் பள்ளத்தில் போய்விட்டன. மழைக் காலத்தில் தண்ணீர் உள்ளே நுழைந்து விடுகிறது.

**மேயர் :** சாலையைச் சுரண்டிவிட்டு, சுரண்டிய கனத்துக்குதான் புதிய சாலை போட வேண்டும்.

**மகாலட்சுமி :** நீங்களும், கமிஷனரும், போலீஸ் கமிஷனரும் அடிக்கடி குடியிருப்போர் சங்கப் பிரதிநிதிகளைச் சந்தித்து குறைகளைக் கேட்டுச் செயல்பட்டால் நன்றாக இருக்கும்.

**மேயர் :** நிச்சயமாகச் செய்வோம். என்னை எப்போதும், யார் வேண்டுமானாலும் சந்திக்கலாம்.

**ரமா வெங்கட் :** ஸார். நீங்கள் நல்லவர்தான். ஆனால், வல்லவராகவும் மாற வேண்டும் என்பதே எங்கள் விருப்பம்.

***சூடு அடங்க கொஞ்சம் நேரமானது.***

# ஸ்ரீ ராமகிருஷ்ணா மருத்துவமனை

## ஸ்ரீ ராமகிருஷ்ணா புற்றுநோய் சிகிச்சை மற்றும் ஆராய்ச்சி மையம்



மருத்துவ புற்று நோய் சிகிச்சை



லீனியர் ஆக்சிலிரேட்டர் மூலம் கதிர்வீச்சு சிகிச்சை



கோபால்ட் 60 தியேட்ரான் 780 இ மூலம் கதிர்வீச்சு சிகிச்சை



உட்கதிர் வீச்சு சிகிச்சை



புற்று நோய் அறுவை சிகிச்சை



காமா கேமரா



**ஸ்ரீ ராமகிருஷ்ணா புற்றுநோய் சிகிச்சை மற்றும் ஆராய்ச்சி மையம்**

ஆவாரம் பாளையம் ரோடு, கோயம்புத்தூர் – 641 044. தமிழ்நாடு, இந்தியா.

போன் : 0422 – 4500203, 2210075, 4389797. பேக்ஸ் : 0422 – 2210521 கேன்சர் ஹெல்ப் லைன் : 94423 44775

www.ramakrishnaonco.com E-mail : sriorcoimbatore@yahoo.co.in



# கலக்குது இவ

மலைகளின் இளவரசி நீலகிரியின் அழகில் மனத்தைப் பறிகொடுத்த ஆங்கிலேயர்கள், அதை முழுவதுமாக ரசிக்க ரயிலை ஏற்பாடு செய்தார்கள். ஒரு நூற்றாண்டைக் கடந்துவிட்ட இந்த ரயிலை யுனெஸ்கோ அமைப்பு பாரம்பரியச் சின்னமாக அறிவித்திருக்கிறது. இந்த ரயில் பற்றி சுவாரஸ்யத் தகவல்கள் சில....

- நம் நாட்டில் டார்ஜிலிங்குக்கு அடுத்தபடியாக மலையில் ரயில் ஓடுவது நீலகிரியில் மட்டும்தான். இதில் வெளிநாட்டுப் பயணிகள், பயணிக்காத நாளே கிடையாது!
- மேட்டுப்பாளையத்திலிருந்து உதகைக்கு ரயில் விடும் திட்டம், 1859ம் ஆண்டு தொடங்கப்பட்டது. செயல்வடிவத்துக்கு வந்தது 1891ல்.
- 1882ல் இந்தியா வந்த சுவிட்ஸர்லாந்து நாட்டைச் சார்ந்த நிக்கலஸ் நிக்கன் பெர்க், நீலகிரியை முழுமையாகப் பார்வையிட்டு, ரயில்பாதை அமைக்க சர்வே செய்தார்.

# பாரு ஸ்டைலு!



* பி.ஏ.வஹாத்



* ஓ.கே.விஜயகுமார்

● மலையைக் குடைந்து பாதைகள் அமைக்கும் பணி எட்டு ஆண்டுகள் நடைபெற்றிருக்கின்றது. சிறைக் கைதிகளும் இப்பணியில் ஈடுபடுத்தப்பட்டனராம்.

● 1899ல் முதல் வெள்ளோட்டமாக மேட்டுப்பாளையத்திலிருந்து குன்னூர் வரைக்கும் ரயில் விடப்பட்டது. இந்த இரண்டு ஊர்களுக்கும் இடையில் ரயில் பாதை அமைக்க ஆன செலவு முப்பத்தைந்து லட்சம் ரூபாய்.

● 1908ல்தான் குன்னூரிலிருந்து உதகைக்கு தம் பயணத்தைத் துவக்கியிருக்கிறது இந்த ரயில். இதற்கு மட்டும் செலவான தொகை இருபத்து நான்கு இலட்சம் ரூபாய்.

● கல்லாரிலிருந்து குன்னூர் வரை 27 கி.மீ.க்கு ரயில் தண்டவாளங்களுக்கு இடையில் பல்சக்கரம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதை வடிவமைத்தவர் இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த பொறியாளர் மைக்கேல்.

● 12 அடி தூரத்துக்கு ஓர் அடி உயரம் ஏறும் வகையில் அமைக்கப்பட்ட மலைப் பாதையில் ஓடும் என்ஜின்கள் சுவிட்ஸர்லாந்தில் தயாரிக்கப்பட்டவை. இவை நீராவியால் மட்டுமே இயக்கப்படுகின்றன.

● மேட்டுப்பாளையத்திலிருந்து உதகை மலை செல்லும் வழியில் 208 குறுகிய வளைவுகளும் 208 பாலங்களும், 16 குகை வழிப்பாதைகளும் உள்ளன.

● ''நீலகிரி மலை ரயிலை பாரம்பரிய மிக்க சின்னமாக அறிவிக்க வேண்டுமென 2000ம் ஆண்டு யுனெஸ்கோ அமைப்புக்குக் கோரிக்கை வைக்கப்பட்டது. 2004ம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது'' என்கிறார் இந்த ரயில் குறித்து தொடர்ந்து பத்திரிகைகளில் எழுதிவரும் கட்டுரையாளர் பி.ஏ.வஹாத்.

● ''நீலகிரி மலையை ரயிலில் பயணித்துக்கொண்டே பார்ப்பது பேரானந்தம். மலை வளைவுகளிலும், குகைகளிலும், ரயிலில் பயணிக்கிறபோது கிடைக்கிற சந்தோஷத்துக்கு நம் சொத்தையே எழுதித் தரலாம். ஒவ்வொரு வளைவும் ஒரு போதி மரம். பணிந்து ஏறினால் மேலே மேலே போவாய்; நிமிர்ந்து திரிந்தால் இறங்கி விழுவாய் என்று ஒவ்வொரு மலையும் நமக்கு உணர்த்திக் கொண்டே இருக்கிறது'' என்று தத்துவ மழை பொழிகிறார் மேட்டுப்பாளையம் ஓ.கே. விஜயகுமார்.

வாசகர் யோசனை: **ஓ.கே.விஜயகுமார்**

தும்மினாலோ, இருமினாலோ சுயகட்டுப்பாடின்றி அடிக்கடி சிறுநீர் வெளியேறுதல் என்று பெண்களுக்கே உரிய அபாயத்திலிருந்து மீட்கும் சிறப்புச் சிகிச்சை யூரோ கைனகாலஜி. இச் சிகிச்சையை அளிக்கவல்ல, மருத்துவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம்! அவர்களுள் ஒருவர் டாக்டர் கார்த்திக் குணசேகரன். இந்தச் சிறப்பு சிகிச்சை தமிழகத்தில் வேறு எங்கும் இல்லாததால் சென்னைக்கே வரவேண்டிய நிலை. எனவே, கோவையில் பாலா மெடிக்கல் சென்டர் அண்டு ஆஸ்பிட்டலில் தமது கௌரி மையத்தின் மூலமாகச் சிறப்புச் சிகிச்சையை துவக்கியுள்ளார் டாக்டர் கார்த்திக் குணசேகரன். அவரைச் சந்தித்தபோது...

மேலும் விவரம் மற்றும் தொடர்புக்கு:
சென்னை: 044-24341055, 24322591
கோவை:0422-2323456, 2323333

**பெ**ண்களுக்கு மட்டும்தான் பிரச்னையா?

''அடிக்கடி தன் விருப்பமின்றி சிறுநீர் வெளியேறுவதை 'ஓவர் ஆக்டிவ் பிளாடர்' என்றும், தும்மினால், இருமினால் சிறுநீர் வெளியேறுதலை 'ஸ்ட்ரெஸ் யூரினரி இன்கான்டி னன்ஸ்' (Stress Urinary Incontinence) என்றும் சொல்வோம். 'ப்ரோலாப்ஸ்' என்கிற அடியிறக்கம், ஆண்களுக்கு வரும் 'ஹெர்னியா' போன்றதுதான். இது வந்தால் கருப்பை கீழிறங்கி சிறுநீர்ப்பை எனப்படும் பிளாடரும் மலக்குடலும் கீழிறங்கிப் போகும். கட்டுப்பாடற்ற சிறுநீர்க் கசிவு துவங்கும். இந்த மூன்று நிலைகளுக்கும் சிகிச்சை உண்டு.''

**பிரச்னை எதனால்?**

''மாதவிடாய் நின்று ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் நின்றுவிட்ட தன்மை, அதிக உடல்பருமன், கருப்பை நீக்கப்பட்டிருத்தல், நரம்புத் தளர்ச்சி, சுமை தூக்குதல், மலச்சிக்கல், புகை பிடித்தல்... போன்ற காரணங்கள் மட்டுமின்றி சுகப் பிரசவமும் ஒரு முக்கியக் காரணம்.''




**சுகப்பிரசவத்தின் போது அப்படி என்ன பாதிப்பு**

ஏற்படக்கூடும்?

''கர்ப்பக் காலத்தில் குழந்தையின் தலை சிறுநீர்க்குழாய், மலக்குடல் போன்றவற்றை அழுத்துவதாலும், சுகப் பிரசவத்தின் போது அழுத்தத்தோடு குழந்தை வெளியே வரும்போது சிறு நீர்ப்பை, கர்ப்பப்பை, மலக்குடல் இவற்றைத் தாங்கி நிற்கும் பெல்விக் ஃப்ளோர் என்ற தசையும், நரம்புகளும் தளர்ந்துவிடுவதாலும், உள்ளுறுப்புகள் இயல்பு நிலையிலிருந்து விலக நேர்கிறது. இதுவே, சிறுநீர்க்கசிவுக்குக் காரண மாகிறது.''

**அப்போ, சுகப்பிரசவம் அபாயம் என்கிறீர்களா?**

''இல்லை. நூறு பேரில் நாற்பது பெண்களுக்கு சுகப் பிரசவம் ஆன பிறகு இப்பிரச்னை உருவாக வாய்ப்பு இருக்கிறது என்று தான் சொல்கிறேன். சுகப்பிரசவத்தைத் தவிர்க்க வேண்டும் என்று சொல்லவில்லை. இந்தப் பிரச்னைக்குத் தீர்வு உண்டு என்கிற விழிப்புணர்வு இன்னும் பெண்களிடம் வரவில்லை. குறிப்பாக பெண்கள் சந்திக்கும் பொது மருத்துவர், மகப்பேறு மருத்துவர்க்கே போதிய விழிப்புணர்வு இருப்பதில்லை.''

# ப்ராப்ளம்!

**இதன் உச்சகட்ட விளைவு?**

சமூகத்துடனான உறவு நின்றுவிடும். வேலை செய்ய இயலாமை, தாம்பத்தியம் பாதிப்பு, தனித்திறமை முடக்கம் என பெண்கள் முடங்கிவிடும் பரிதாபம்தான் இதன் உச்சம்.''

**இதற்கு ஆரம்பச் சிகிச்சை என்ன?**

துவக்கக் காலத்தில் உடற்பயிற்சி மூலம் நீக்கலாம். இதற்கான பிரத்யேக அதிதொழில்நுட்ப ஒரே மிஷின் தமிழ் நாட்டில் சென்னையில் எங்களிடம் மட்டுமே உண்டு. 'பையோ ஃபீட் பேக்' (Bio feed back) என்ற நுட்பத்துடனான பயிற்சியை மருத்துவ மனையில் கற்றுக் கொண்டு தொடரலாம். துவக்க காலம் என்று சொன்னது இப்பிரச்னை துவங்கிய ஒன்று இரண்டு ஆண்டுக்குள் என்பதாகும். அதற்கு முன் 'மல்டி சேனல் யூரோ டைனமிக்' என்ற பரிசோதனை மூலம் கட்டுப்பாடின்றி சிறுநீர் வெளியேறுதலுக்கான காரணத்தை அறிந்தபின் அறுவை சிகிச்சை செய்யலாம்.''

✱ கார்த்திக் குணசேகரன்



**தனியறையில், தனிமையில் முடங்கி விடும் பரிதாபம்தான் இதன் உச்சம்**

**அறுவை சிகிச்சையைப் பற்றி...**

கட்டுப்பாடின்றி சிறுநீர் வெளியேறுவதைச் சரிசெய்ய TVT-sling என்ற சிகிச்சை மூலம் சிறுநீர்க் குழாய்க்குக் கீழே வலையைப் பொருத்துகிறோம். 97 சதவிகிதம் வெற்றிகரமான இச்சிகிச்சையால், இதுவரை 400 பேர் பயனடைந்துள்ளனர். ஒரே நாளில் வலியின்றி, ரத்தக்கசிவின்றி வீடு திரும்பலாம். பெண்களுக்கு நாம் சொல்வது Be in Control என்பதுதான்.''

**- அமிர்தா**





"அரசு கஜானா காலி... எனவே அத்தனை ஆயுதங்களையும் விற்று, அந்தப் பணம் கஜானாவுக்கு அனுப்பப்படும். நமது ஒரே ஆயுதம் இனி உருட்டுக் கட்டைகள்தான். இது அரசரின் உத்திரவு!"

# உருட்டுக் கட்டை

உக்கிரபாண்டி பூபதி



"எதிரிநாட்டு மன்னன் படை பலத்தைப் பெருக்கச் செலவு செய்வதே இல்லை என்கிறீரே.. எப்படி?"

"மன்னா... வாள் இல்லை... ஈட்டி இல்லை... எந்தவித ஆயுதமும் இல்லை. அரசன் முதல் சேவகன் வரை பயன்படுத்துவது உருட்டுக் கட்டைதான்!"





"அமைச்சரே... தளபதி என்ன தவறு செய்தார்?"

"அரசே... அரண்மனைக்கு வந்த நான்கு லோடு உருட்டுக்கட்டைகளைக் கடத்தி... அதுவும் ஆயுதக் கிடங்குக்கு வந்தது... அரண்மனை சமையல் கொட்டடிக்கு சப்ளை செய்து காசுபார்த்துவிட்டார்."



"தளபதி... நம் நாட்டு கொடி முதல், வீரர்கள் உடை வரை நமது வெற்றிச் சின்னமாக உருட்டுக் கட்டைதான் இடம்பெற வேண்டும்..." இது என் ஆணை!



# பராக் பராக்!

வைதேகி கண்ணன்



"அரசே... எப்படி இவ்வளவு வேகமாக போர்க்களத்திலிருந்து ஓடி வர முடிந்தது..."

"இடுப்பிலே இருந்த உருட்டுக்கட்டை செமகனம்... கழட்டி, கடாசிவிட்டுச் சிட்டாய்ப் பறந்து வந்துவிட்டேன்... எப்படி என் ஐடியா?"




சத்தீஸ்கரில் இரண்டு ரூபாய்க்கு 'அரிசித் திட்டம்', மத்தியபிரதேசத்தில் 'லாட்லி லட்சுமி திட்டம்' எனும் பெயரில் பெண் குழந்தை முன்னேற்றத் திட்டம் ஆகியவற்றை அறிமுகப்படுத்திய பா.ஜ.க., தேசிய அளவில் ஆட்சிக்கு வந்தால், நாடு முழு வதும் இவற்றை அமல்படுத்துவோம் என்கிறது.

கூடவே, 'தகவல் தொடர்புப் பார்வை' என்ற பெயரில் வெளியிட்டுள்ள அறிக்கையில் தகவல் தொடர்பு சம்பந்தப்பட்ட பணிகளை கிராமப்புறங்களில் தொடங்குவதாகவும், பத்தாயிரம் ரூபாயில் லேப்டாப்களை ஒரு கோடி மாணவர்களுக்கு வழங்குவோம் என்றும், வறுமைக்கோட்டுக்குக் கீழே உள்ள ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு செல்ஃபோன் இலவசம் என்றும் அத்வானி அறிவித்திருக்கிறார்.

"வறுமைக் கோட்டுக்குக் கீழுள்ள ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு செல்ஃபோன் இலவசம்!"

- அத்வானி அட்டாக்

இதன் மூலம் ஆட்சிக் கோட்டையைப் பிடிக்குமா பாரதிய ஜனதா கட்சி? ஒஸ்மனாபாத் பாராளுமன்றத் தொகுதியில் உள்ள துல்ஜாபூரில் சிலரிடம் கருத்து கேட்டோம்.

துல்ஜாபூர் மராட்டிய மன்னர் சத்ரபதி சிவாஜியின் கோட்டை உள்ள ஊர். பவானி அம்மன் சிவாஜிக்கு வீர வாளை வழங்கினாள் என்பதில் மராட்டியர்களுக்கு எந்தச் சந்தேகமும் இல்லை.

ஒஸ்மனாபாத் தொகுதியின் எம்.பி.யாக இப்போது இருப்பவர் கல்பனா ரமேஷ் நரகரி. காங்கிரஸின் கோட்டையாக இது விளங்குகிறது. இந்திய தேசிய காங்கிரஸும், ஷரத் பவாரின் தேசியவாத காங்கிரஸும் இந்த இடத்தில் போட்டியிட முயற்சிக்கின்றனர். போன முறை S.C. பிரிவினருக்கென ஒதுக்கப்பட்ட ஒஸ்மனாபாத், இம்முறை பொதுத் தொகுதி ஆகியிருக்கிறது. அருகிலுள்ள லத்தூர் தொகுதி இம்முறை S.C.களுக்கு என ஒதுக்கப்பட, அந்தத்

தொகுதியிலிருந்து சிவராஜ்பட்டீல் (முன்னாள் மத்திய உள்துறை அமைச்சர்), விலாஸ்ராவ் தேஷ்முக் (முன்னாள் மஹாராஷ்டிர முதல்வர்) ஆகியோர் போட்டியிட விருப்பம் தெரிவித்திருக்கிறார்கள். தேசியவாத காங்கிரஸ் கட்சியின் ஸீனியர் தலைவர் பதம்சிங் பட்டீலும் ஒஸ்மனாபாத்தில் போட்டியிட பெரும் முயற்சி செய்கிறார்.

ஆக, ஒஸ்மனாபாத் தங்கள் கோட்டை என்பதில் காங்கிரஸ் கூட்டணிக்குச் சந்தேகம் இல்லை. இம்முறை தேர்தல் முடிவுகள் என்னவாகும்? பாரதிய ஜனதாவின் கவர்ச்சிகரமான அறிவிப்புகள் வேண்டிய

''சொல்வாங்க ஆனா செய்ய மாட்டாங்க'' என்று நிச்சயமாகக் கூறும் தினகர் டௌலத் பட்டீல், பா.ஜ.க.வுக்குத்தான் வோட்டுப் போடப் போகிறாராம்! ''குறைந்தபட்சம் செல்ஃபோன், லாப்டாப்னு விஞ்ஞான முன்னேற்றங்களை யாவது பரிசாக அளிக்கிறேன்னு சொல்றாங்களே, அந்தவரைக்கும் சந்தோஷம்'' என்கிறார்.

ருக்மிணி, ''எதுவுமே கொடுக்காமல் வாக்குகளைத் திருடறதுக்குப் பதில் எதையாவது கொடுப்பது நல்லதுதானே. ஆனா இதையெல்லாம் கொடுக்கிறதுக்குப் பதில் ஒவ்வொரு வீட்டிலும் ஒருத்தருக்கு


ஷரத்பவார்


விலாஸ்ராவ் தேஷ்முக்


சிவராஜ்பட்டீல்

# வீட்டுக்கொரு செல்ஃபோன்!

பலனைத் தருமா?

ஓட்டல் நடத்திவரும் பட்டீல் சிவராஜ் விட்டல்ராவ், ''இதையெல்லாம் ஏற்கெனவே அவர்கள் ஆட்சி செய்தபோது ஏன் கொடுக்கவில்லை? எல்லாம், வாக்குகளைக் கவர்ந்திழுக்கும் தூண்டில். ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் நம் வரிப் பணம்தான் அரசியல்வாதிகளின் பாக்கெட்டுகளில் இருக்கும். அவர்கள் மக்களுக்கு எதையுமே இலவசமாகக் கொடுப்பதாகச் சொல்வது ஏமாற்றுத்தான்'' என்றார்.

ஏதாவது வேலை தரலாமே'' என்றார்!

''ஒருமுறை காங்கிரஸுக்கு அடுத்த முறை பா.ஜ.க.வுக்குனு மாறி மாறி வோட்டுப் போடறோம். ஒரே ஆட்சியைத் தொடரவிட்டா ரொம்பவும் கருட்டிக்குவாங்க'' என்றார் அமோல்.

ஒஸ்மனாபாத்தை காங்கிரஸ் கூட்டணி தக்கவைத்துக்கொள்ளும் என்பதே நாம் சந்தித்த பலரின் கருத்தாக இருக்கிறது.

மகாராஷ்டிராவிலிருந்து:
**எலெக்ஷன்ஜி**

(மங்கள) விரோத வருடப் பலன்கள்

தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்; நடக்கும்!

சென்றவாரத் தொடர்ச்சி



**துலாம்:** முதல் ஆறு மாதங்கள் ஏற்ற இறக்கம் இருக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். புதிய வேலைக்குப் போவதை சற்று தள்ளிப் போடவும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் விறுவிறுப்பான போக்கு காணப்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். உடன் பிறந்தவர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். பூர்வீகச் சொத்து, பாகப்பிரிவினை ஆகும். வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் கைகூடும். தடை விலகி திருமணம் கைகூடும். பிரிந்த குடும்பம் ஒன்று சேரும். தேர்வில் அதிக மதிப்பெண் கிட்டும். உயர்கல்விக்காக வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். வேலையில் இருக்கும் மன பயம் விலகும். அரசியல் வாதிகளுக்கு பதவி பட்டம் விருது வந்து சேரும். பத்திரிகை துறை, அச்சுத்துறை, கட்டிடத்துறை சிறப்பாக இருக்கும். பின்வரும் ஆறு மாதம் வசந்த காலமாக இருக்கும். குரு / சனி / ராகுவுக்கு அந்தந்த கிழமைகளில் தீபம் ஏற்றி வழிபட்டு வர நற்பலன் மிகுந்து காணப்படும்.

**விருச்சிகம்:** புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குலதெய்வ பிரார்த்தனை நிறைவேறும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் மனமகிழ்ச்சி ஏற்படும். தடை விலகி திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல



அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். கடன் சுமை குறையும். உறவினர்கள் / நண்பர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். மனைவி வழியில் அனுகூலம் ஏற்படும். அரசியல்வாதிக்கு ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். பெண்களுக்கு நவநாகரிக பொருட்கள் சேரும். ஆடை ஆபரண பொருட்கள் வாங்குவீர்கள். உல்லாசப் பிரயாணம் தேடி வரும். கட்டட தொழில் மூலம் நல்ல வருவாய் கிட்டும். சினிமாவில் நல்ல வாய்ப்பு தேடி வரும். எழுத்துத்துறை, அச்சுத்துறையில் உள்ளவர்களுக்கு ஏற்றம் உண்டாகும். கைபொருள் மீது கவனம் தேவை. யாரிடமும் வாக்கு வாதம் செய்ய வேண்டாம். யாருக்கும் ஜாமின் போட வேண்டாம். செவ்வாய், வெள்ளிதோறும் ராகு / கேதுவுக்கு விளக்கு ஏற்றி வழிபடவும். வியாழன்தோறும் தட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனை செய்து வழிபட நற்பலன் கிட்டும்.



**தனுசு:** சுப காரியப் பேச்சு வார்த்தை இனிதாக முடியும். வீடு / மனை வாங்க சிறந்த தருணம். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். நீண்ட காலம் முடிவு பெறாத வழக்கு வெற்றிப் பாதைக்குச் செல்லும். உடல் ஆரோக்கியம் சீராகும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். கடன் சுமையிலிருந்து விடுதலை கிட்டும். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். வெளியூர்ப் பிரயாணம் தேடி வரும். வாக்குவன்மை மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புதிய தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். வராத நிலுவைகள் வந்து சேரும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். சமூக சேவை செய்பவர்களுக்கு நல்ல காலம். அரசியல் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படும். எதிலும் வெற்றி வாகை சூடுவீர்கள். பணவசதி பெருகும். தொழிலில் பிஸியாக இருக்க நேரிடும். அதிக வருவாய் கிட்டும். குரு / சனி / ராகு / கேது கிரகங்களுக்கு அந்தந்தக் கிழமையில் தீபம் ஏற்றி வழிபட்டு வந்தால் நற்பலன் உண்டாகும்.



**மகரம்:** முதல் ஆறு மாதங்கள் வரை பொறுமையுடனும், நிதானத்துடனும் செயல்படவும். எதிலும் அகலகால் வைக்காமல் இருப்பது நல்லது. பின் வரும் ஆறு மாதங்கள் ரொம்ப நன்றாக இருக்கும். பூர்வீகச் சொத்துகள் பேச்சு வார்த்தையில் இழுபறியாக இருக்கும். புதிய தொழில் முயற்சிகளைச் சற்று தள்ளி போடவும். கடன்சுமை அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனமுடன் இருப்பது நல்லது. மாணவர்களுக்கு பரீட்சையில் எதிர்பார்த்த மதிப்பெண் வராது. ஆதலால் கடின உழைப்புடன் படித்து தேர்வு எழுதவும். வாகனத்தில் செல்லும்போது உஷார். யாருக்கும் ஜாமின் போடக் கூடாது. திருமண முயற்சியை தள்ளிப்போடவும். பண விஷயத்தில் உஷாராக இருக்கவும். உறவினர்களுடனும் நண்பர்களுடனும் சங்கடங்கள் வரக்கூடும். அதனால் உஷாராக இருக்கவும். குடும்பப் பெண்களுக்கு வேலைப்பளு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியம் தொல்லை கொடுக்கும். ஐப்பசி மாதம் முதல் ராஜயோகமான

காலம் ஆரம்பம். தடைபட்டு வந்த அனைத்துக் காரியங்களும் நிறைவேறும். துன்பத்திலிருந்து விடுதலை கிட்டும். சனி / குரு / ராகு / கேது வழிபாடு செய்து வர சங்கடங்கள் குறையும். நற்பலன் அதிகரிக்கும்.



**கும்பம்:** புதிய தொழில் முயற்சிகள் பலன் அளிக்கும். ஆடை ஆபரண நவ நாகரிக பொருட்கள் வாங்குவீர்கள். கடன் சுமை தீரும். மன அமைதி கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் மன சந்தோஷம் ஏற்படும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்று விரும்பிய கல்வியைப் பெறுவீர்கள். வேலையில் உயர்வு ஏற்படும். வியாபாரத்தில் நல்ல உயர்வு ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் கிட்டும். தடை விலகி திருமணம் கைகூடும். உடன் பிறந்தவர்கள் மூலம் நன்மை ஏற்படும். மன சஞ்சலம் தீரும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். பாராட்டும் பரிசும் கிட்டும். அரசியல் தலைவர்களுக்கு நல்ல யோகமான காலம். சமூக சேவகர்களுக்கு விருதுகள் கிட்டும். பத்திரிகை துறையில் உள்ளவர்களுக்கு நற்பெயர் ஏற்படும். மருத்துவ துறையைச் சார்ந்தவர்கள் விருது பெறும் யோகம் உண்டு. அச்சுக்கலையில் உள்ளவர்கள் ஏற்றம் காண்பீர்கள். அஷ்டமத்து சனியால் எந்தப் பாதிப்பும் வராது. குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். கூட்டுக் குடும்பத்தில் உள்ளவர்கள் தனிக் குடித்தனம் செல்வார்கள். வியாழன், சனி தோறும் குருபகவானுக்கு தீபம் ஏற்றிவர நன்மை உண்டாகும்.



**மீனம்:** பண வசதி பெருகும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். பிரிந்தவர்கள் இணைந்து வாழ்வார்கள். திருமண முயற்சிகள் கைகூடும். கடன் தொல்லை தீரும். நெருங்கிய கூட்டாளிகளைப் பிரிய நேரிடும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் கிட்டும். உத்தியோகத்தில் பதவி உயர்வு ஏற்படும். சிலருக்கு புதிய வேலை வாய்ப்புகள் தேடி வரும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். வழக்கு வெற்றி பெறும். எதிர்ப்புகள் விலகும். உடல் ஆரோக்கியம் சீராகும். மனக் கவலை தீரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வீடு / மனை வாங்க சிறந்த தருணம். கடன் பிரச்னை தீரும். பின்வரும் ஆறு மாதங்கள் மன உற்சாகத்துடன் விளங்குவீர்கள். பத்திரிகையில் பெயர் வரும். எடுத்த காரியம் வெற்றி அளிக்கும். சமூக சேவகர்களுக்குப் பாராட்டும் விருதும் கிட்டும். குடும்பப் பெண்களுக்கு நற்பெயர் உண்டாகும். குழந்தை பாக்கியம் உண்டாகும். ஆன்மிகப் பயணம் செல்வீர்கள். மனைவி வழியில் சொத்து வந்து சேரும். கைப்பொருள் மீது கவனம் தேவை. வாகனத்தில் செல்லும்போது கவனமாக இருக்கவும். கலைத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு புதிய வாய்ப்புகள் கிட்டும். அரசியல்வாதிகளுக்கு ஏற்றமான காலம். தொழில் அதிபர்களுக்கு ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். புதிய முயற்சிகள் வெற்றியைத் தரும். வியாபாரத்தில் லாபம் கிட்டும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009



**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!**

**முதல் பரிசு - ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு- ரூ.5,000/-**

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

**விதிமுறைகள் :**

* கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
* சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
* அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை; போட்டி முடிவு வெளியாகும் வரை எழுது வதில்லை என்று உறுதிமொழி தரவேண்டும்.
* படைப்பாளி முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவ தொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
* முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
* தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
* போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப் பக்கூடாது.
* பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
* **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032.**

* கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.
* போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.

*படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.*

**- ஆசிரியர்**




**மே**ற்கு வங்கத்தில் தேர்தல் பிரசாரத்தில் சூடுபறக்கும் விஷயம் டாடாவின் நானோ கார்தான். அண்மையில் ஒரு தேர்தல் பிரசாரக் கூட்டத்தில் மம்தா பானர்ஜி, ''நான் நானோ காரில் பயணம் செய்யமாட்டேன். அது மக்களின் ரத்தத்தை உறிஞ்சி உருவாக்கப்பட்டது'' என்றார்!

***(நீங்க எம்மாம் பெரிய தலீவரு! அந்த துக்கிணியூண்டு காரு உங்களுக்கு எப்படி பத்தும்?)***

**கொ**ச்சியின் முகத்துவாரப் பகுதியின் ஒரு கடலோரக் கிராமத்தில் தச்சுப் பட்டறை நடத்தி வந்தார் பிரான்சிஸ்; அவர் மனைவி மேரி. கொச்சி துறைமுகத்தின் மூவாயிரம் கோடி ரூபாய் கண்டெயினர் டெர்மினல் விரிவாக்கப் பணி என்ற பெயரில், அவர்களின் தச்சுக் கூடம் புல்டோஸரால் தரை மட்டமாக்கப்பட்டது. அவரைப் போல பாதிக்கப்பட்ட ஏழை மக்கள் ஏராளம். தங்கள் மறு வாழ்வுக்கு வழி என்ன என்று கேட்டு தேர்தல் களமிறங்கி இருக்கிறார் மேரி. ''ஏழை மக்களின் வயிற்றில் அடிக்கும் மனிதத் தன்மையற்ற நில ஆர்ஜித சட்டத்தை, மாற்றப் போராடுவதே என் நோக்கம்'' என்கிறார் எர்ணாகுளம் தொகுதியில் சுயேச்சையாகப் போட்டியிடும் மேரி.

***(மேட்டர் நல்லாத்தான் இருக்குது. ஆனா மீட்டர் நிறைய வேணுமே?!)***

**இ**ந்திரா காந்தி, 1980ல் போட்டியிட்டு ஜெயித்த தொகுதி ஆந்திராவின் மேடக். அதன் பிறகு நாலு முறை காங்கிரஸும், பா.ஜ.க.வும், தெலுங்கானா ராஷ்டிர ஸமிதியும் தலா ஒருமுறையும் ஜெயித்தன. இப்போது ஸ்டார் அந்தஸ்த்து வந்திருக்கிறது அந்தத் தொகுதிக்கு. காரணம், அங்கே டி.ஆர்.எஸ். கட்சியின் வேட்பாளர் நடிகை விஜயசாந்தி போட்டியிடுகிறார்.

***(உங்களுக்கு வோட்டு போடாதவங்களை அடிச்சுத் துவைச்சிட மாட்டீங்களே மேடம்?)***

**"நான், நானோ காரில் பயணம் செய்யமாட்டேன். அது மக்களின் ரத்தத்தை உறிஞ்சி உருவாக்கப்பட்டது!"**

லாலு, பாஸ்வான் இருவரையும் எதிர்த்து, பீகாரின் எல்லா தொகுதிகளிலும் காங்கிரஸ், வேட்பாளர்களை நிறுத்தியுள்ளது. தேர்தலுக்கு முன் கட்சி மாறிவிட்ட லாலுவின் மைத்துனரான சாது யாதவ்தான் இப்போது காங்கிரஸின் பிரசார பீரங்கி. அவர் மாநிலம் முழுக்க சென்று பிரசாரம் செய்ய வசதியாக, காங்கிரஸ் அவருக்கு ஒரு ஹெலிகாப்டரை வழங்கியுள்ளது.

*(பேரில்தான் சாது! இந்த சாது மிரண்டால் கலவரம்தான்!)*

## அக்கம் பக்கம்



சத்திஸ்கர் மாநிலம் ராய்கர் தொகுதியில் பா.ஜ.க. வேட்பாளராகப் போட்டியிடும் விஷ்ணு தியோ சாய், ஏழெட்டு மேஜிக் கலைஞர்களை, தம் தேர்தல் பிரசாரத்துக்காக அழைத்திருக்கிறார். அவர்கள் தினமும் தொகுதியில் பல்வேறு இடங்களுக்குச் சென்று மேஜிக் வித்தை காட்டி, கூட்டம் கூட்டி, பா.ஜ.க. வேட்பாளருக்காகப் பிரசாரம் செய்கிறார்கள்.

*(மந்திரத்தாலே வாக்குகள் வருமா?)*

ஓசாமா - ஒபாமா ஒரே ஒரு எழுத்து எவ்வளவு பெரிய மாற்றத்தை ஏற்படுத்துகிறது? அதுபோலத்தான் உங்கள் வோட்டும். உங்களின் ஒரு வோட்டுகூட சமூகத்தில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்த வல்லது. தவறாமல் வாக்களியுங்கள். இப்படி ஆந்திராவில், 'கரீம் நகர் இளைஞர்கள் அமைப்பு' ஒன்று பிரச்சாரம் செய்து, வாக்காளர்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகிறது.

*(ரெண்டு வோட்டு கூட போடத் தயார்! உடமாட்டேங்கறாங்களே!)*

பெங்களூரு வடக்குத் தொகுதியில் காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிடுபவர் முன்னாள் மத்திய அமைச்சர் ஜாபர் ஷெரீஃப். அவரை எதிர்த்துப் போட்டியிடும் பா.ஜ.க. வேட்பாளர் சந்திரகௌடா, முன்னாள் காங்கிரஸ்காரர். இவர்தான் 1978 பொதுத் தேர்தலில் படுதோல்வி கண்ட இந்திரா காந்தியின் அரசியல் மறுப் பிரவேசத்துக்கு வசதியாக தன்னுடைய சிக்மகளூர் எம்.பி. பதவியை ராஜினாமா செய்து இந்திரா காந்தி இடைத் தேர்தலில் போட்டியிட வழி செய்தார்.

*(காலம் மாறினா காட்சி... ஸாரி...கட்சியும் மாறுமோ!)*

- பரத் ராம்

# "நானோவுக்கு நோ...நோ..!"

# சிவாஜி த சுப்ரீம் பாஸ் 2





கோவையில் வனத்துறை உயரதிகாரியாக இருந்த தியாகராஜன், முத்துமாணிக்கத்தின் நல்ல நண்பர். அவர் ஒருநாள், ''பராசக்தி என்றொரு படம் வந்திருக்கிறது. மிகவும் நல்ல படம். உங்களை அழைத்துக்கொண்டு போகலாம் என்று வந்தேன்'' என்றார். ''பராசக்தியா! எனக்குப் பக்தி படமெல்லாம் பிடிக்காதே'' என்றதும், ''பக்திப் படமில்லீங்க! சமூகப் படம்தான். உங்களுக்கு நிச்சயம் பிடிக்கும்'' என்று வற்புறுத்தி அழைத்துச் சென்றார். கோவை அவிநாசி ரோடு மேம்பாலம் அருகில் இருந்த முருகன் திரையரங்கம், அப்போது டைமண்ட் தியேட்டராக இருந்தது. அங்கேதான் பராசக்தி படம் பார்த்தனர்.

அதில் குணசேகரன் என்ற பாத்திரம் ஏற்றிருந்த சிவாஜி கணேசனின் நடிப்பைக் கண்டு முத்துமாணிக்கம் மனமாரப் பாராட்டினார்.

அதன் பிறகு சிவாஜி கணேசனின் வளர்பிறைப் பொழுதுகள் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாலும், தன்னைப் பற்றி சிவாஜியின் மனத்தில் பிரமிப்பூட்டும் பிம்பமொன்று, பொது நண்பர்களால் தீட்டப்பட்டிருந்ததை அவர் அப்போது அறிந்திருக்கவில்லை.

**அந்தக் காலத்தில் நாடகக் கலைஞர்களை, தூரநின்று வேடிக்கை பார்க்கத்தான் பெரிய குடும்பங்களின் இளைஞர்களுக்கு அனுமதி!**

சிவாஜிகணேசன் தன்னைச் சந்திக்க அருகிலுள்ள ஆனைமலையில் தட்சிணாமூர்த்தியின் வீட்டில் காத்திருக்கிறார் என்று தெரிந்ததுமே,



மரபின் மைந்தன் முத்தையா

# "அப்பாவைக் கேளுங்கள்!"

முத்துமாணிக்கம் சொன்ன முதல் வார்த்தை, ''எதுக்கும் அய்யாகிட்ட சொல்லுங்க! அவங்க அனுமதிச்சா வர்றேன்'' என்பதுதான்.

அவரது தந்தையார் அமராவதிக் கவுண்டர். வேட்டைக்காரன்புதூரின் பெருந்தனக்காரர். 'அமராவதி' என்ற பெயர் அவருக்குச் சூட்டப்பட்டதன் பின்னணியில் நெஞ்சை உருக்கும் வரலாறு ஒன்றும் உண்டு.

இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன், ரெட்டியாரூர் என்ற பகுதியிலிருந்து வேட்டைக்காரன்புதூரில் வந்து குடியேறியவர் சின்னக்கா. வறுமையைப் போக்க வீட்டிலும் காட்டிலும் வேலைகள் செய்து கடும் உழைப்பால் தம் வம்சத்துக்கு வாழ வழிகாட்டிய அசகாய சூரி.

திப்புசுல்தானின் படைவீரர்களில் ஒருவராயிருந்து, பாலக்காடு கோட்டையைக் கைப்பற்ற போர்ப் புலியாய்ப் பாய்ந்துசென்ற படையில் இடம்பெற்று, பகைவர்களிடம் பிடிபட்டு, மலையுச்சியிலிருந்து உருட்டி விடப்பட்ட தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த, அமராவதி என்னும் வீரனின் பெயரை தம் கொள்ளுப் பேரனுக்குச் சூட்டியிருந்தார் சின்னக்கா. இன்றளவும் தங்கள் குலத்தை வாழவைத்த அந்தப்பெருமாட்டியை, கோவில் கட்டிக் கும்பிட்டு வருகிறது அந்தக் குடும்பம்.

தந்தை அமராவதிக் கவுண்டரின் அனுமதி பெற்றுத் தந்தால் வருகிறேன் என்று, முத்துமாணிக்கம் சொன்னதன் முக்கியக் காரணம், அவர்கள் குடும்பத்தில் உள்ள பெரியவர்களின் எண்ணம் அறிந்து நடக்கிற இயல்புதான்.

வேட்டைக்காரன்புதூர், கோவை மாவட்டத்திலே அனேகமாக எல்லோருக்கும் தெரிந்த ஊர். முத்துமாணிக்கத்தின் குடும்பம் பல தலைமுறைகளாக வாழ்ந்து கொண்டிருக்கிற ஊர். அவரது முன்னோர்களில் பெரிய தந்தை பழனிச்சாமிக் கவுண்டர் சிறந்த காந்தியவாதி. கோவை ஜில்லா போர்டில் பதின்மூன்று வருடங்கள் தலைமைப் பதவி வகித்தவர். தமிழ்நாடு ஜில்லா போர்டு தலைவர்களின் கூட்டமைப்பின் தலைவராகவும் இருந்தவர். பலமுறை சட்டசபை உறுப்பின

ராகப் பணியாற்றி இருக்கிறார். காந்திய வழியில் 1942 சத்தியாகிரகப் போராட்டத்தில் சிறை சென்றவர்.

முத்துமாணிக்கத்தின் பாட்டனார் காலத்திலிருந்தே நாடகக் கலையைப் போற்றி வளர்த்தார்கள். அவர்கள் இல்லத்தின் அருகாமையிலேயே நிரந்தரமான பெரிய அரங்கத்தை நிர்மணித்திருந்தார்கள். ஊர் மக்கள் நாடகக் கொட்டகைக்கு முன்பு பெரிய மைதானத்தில் அமர்ந்து பார்க்கும்படியும் இருந்தது அந்த அரங்கம். அந்தக் காலத்தில் புகழ்வாய்ந்த கிட்டப்பா, கே.பி.சுந்தராம்பாள்... போன்ற பல கலைஞர்களையும் பிற்காலத்தில் டி.ஆர். மகாலிங்கம் போன்றவர்களையும் அழைத்துப் பாராட்டியிருக்கிறார்கள். சுமார் 100 வருடக் காலம் நாடக அரங்கமாக இருந்த அது பிற்காலத்தில் அந்த ஊர் பள்ளிக்கூடமாக மாறியது.

அந்தக் காலத்தில் நாடகக் கலைஞர்களை தூரநின்று வேடிக்கை பார்க்கத்தான் பெரிய குடும்பங்களின் இளைஞர்களுக்கு அனுமதி. பொதுமக்களுக்கும், கலைஞர்களுக்கும் அப்போது ஓர் இடைவெளி இருந்தது. இப்படி குடும்பப் பெரியவர்களின் விருப்பங்களுக்கு முதலிடம் கொடுக்கும் பாரம்பரியத்தில் வந்ததால், தந்தையின் ஒப்புதலைப் பெற்ற பிறகே சிவாஜியைச் சந்திக்க வேண்டும் என்று முத்துமாணிக்கம் உறுதியாக இருந்தார்.

முத்துமாணிக்கத்தின் உறவினரான ஒடையகுளம் ஒ.எஸ்.பி. கவுண்டர், அப்பாவிடம் விஷயத்தைச் சொன்னார்.

தந்தை, மகனை அழைத்து, ''ஏம்ப்பா முத்து, உன்னைப் பார்க்கணும்னு பிரியப்படறாங்களாம். பார்த்துட்டுத்தான் வாயேன்'' என்றதும், தன்னுடைய செவர்லே காரில் புறப்பட்டார் முத்துமாணிக்கம்.

ஆனைமலையில் சப்-இன்ஸ்பெக்டர் தட்சிணாமூர்த்தியின் வீட்டுக்குள்ளேயும் வீட்டின் கொள்ளளவுக்குக் கூடுதலாகவே பிரமுகர்கள் அமர்ந்திருந்தார்கள். மிகுந்த அடக்கத்துடன் அமர்ந்திருந்தார் சிவாஜி. திரையில் கம்பீரமான மிடுக்கையும் கனல் தெறிக்கும் பேச்சையும் கண்டு பழகியிருந்தவர்களுக்கு, இந்த வினயமான தோற்றம் வியப்பாக இருந்தது. அதே நேரம் சிவாஜி கணேசன் முத்துமாணிக்கம் என்றால், வனப்பகுதியைச் சேர்ந்த ஒரு முரட்டுப் பாமர மனிதர் என்றே பதிவாகியிருந்தது. ஆனால், ''நாகரிகத் தோற்றமும், ஆறடி உயரமும் கம்பீரமான உருவமும் கொண்டு, செவர்லே காரில் வந்திறங்கிய இளைஞரைப் பார்த்து அசந்தே போனேன்'' என்று பலமுறை சிவாஜி தன் நண்பர்களிடம் ஆச்சர்யப்பட்டிருக்கிறார். முத்துமாணிக்கம் எதிர்பார்த்த சிவாஜியும், சிவாஜி எதிர்பார்த்த முத்துமாணிக்கமும் வெவ்வேறாக இருந்தது போலவே, இருவருக்கிடையிலும் பிரிக்கவே முடியாத நட்பு வேரூன்றப் போகிறதென்பதும் அப்போது அவர்களுக்குத் தெரியாது.

**(வளரும்)**





''என்னங்க... எனக்கு மட்டும் கோன் ஐஸ் வாங்கிட்டு வந்திருக்கீங்க... உங்களுக்கு?''

''அடடே...! உனக்கு மாப்ள பார்த்துட்டாங்கன்னு சொன்னியா.. அந்தச் சந்தோஷத்துல என்னையே நான் மறந்திட்டேன்...''

– எஸ். சரிதா

● உ.குணசீலபாண்டியன், இராஜபாளையம்

? காங்கிரஸ் தலைவிக்குச் சொந்தமாக வீடும் இல்லை; காரும் இல்லை என்று வேட்புமனு தாக்கலில் கூறியிருக்கிறாரே?

! கட்சி இருக்கிறதே; அது எல்லாத்தையும் கவனிச்சுக்குதே! போதாக் குறைக்கு, பார்லிமென்ட்டில் ஆளும் கட்சித் தலைவி என்ற பதவி, அதற்குண்டான சம்பளம், சலுகைகள். வீடும் காரும் சொந்தத்தில் வைத்துக் கொள்வது வேஸ்ட் அல்லவா!



★ கட்சி கவனிப்பு

# அழகிரிக்கு எந்தப் பதவி அழகு?

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

? ம.தி.மு.க. கூடாரம் காலியாகிக் கொண்டிருப்பதைக்கூட கவனியாமல், ''பிரபாகரன் மீது ஒரு துரும்பு விழுந்தாலும் தமிழகத்தில் ரத்த ஆறு ஓடும்'' என்று வைகோ பேசியுள்ளாரே?

! அவர் சாயம் வெளுத்து ரொம்ப நாளாச்சு. அதனால் அவரது புலி ஆதரவு பேச்சு வியப்பளிக்கவில்லை. ஆச்சர்யம் அளிப்பது என்னவென்றால், அவர் மீது என்.எஸ்.ஏ. பிரயோகிக்காமல் வழக்கு மட்டும் பதிவு செய்து உலவ விட்டிருப்பதுதான்.

● வீர.செல்வம், பூம்புகார்

? உலக நாடுகள் பல வேண்டுகோள் விடுத்தும், ராஜபட்சய போரை நிறுத்தாமல் உள்ளாரே; அந்தத் துணிச்சலுக்குக்

## நீங்கள் கேட்டவை

## - தராசு



★ தொண்டர் பாதுகாப்பு

**காரணம் என்ன?**

! பிரிவினையையும் பயங்கரவாதத்தையும் எதிர்க்கும் தார்மிக பலம், பிரபாகரனிடம் குடிகொண்டுள்ள பல்வேறு அதர்மப் போக்குகள் - இவைதான் ராஜபட்சயவின் துணிச்சலுக்குக் காரணம். வன்முறை மூலம் இலங்கைத் தமிழர்களின் நலனை, பிரபாகரன் என்ன, யாராலுமே பெற்றுத்தர முடியாது.

● **எஸ்.உஷா, மதுரை** ★

**? நேர்காணல் நிகழ்ச்சியில், ''எத்தனை கோடி ரூபாய் வேண்டுமானாலும் செலவிடத் தயார்'' என்று பெட்டி பெட்டியாக கரன்ஸியுடன் காத்து நிற்கும் கரை வேட்டிகளை, வருமான வரித் துறையினர் கைது செய்ய முடியாதா?**



✱ வெளுத்த சாயம்

! கணக்கில் வராத கறுப்புப் பணம் என்பதற்குச் சாட்சியம் இருந்தால், கைது பண்ணலாம், தாராளமாக. ஆனா, வருமான வரித்துறையினருக்கு மீன் பிடிக்கத்தான் தெரியும். சுறா மீன்கள், திமிங்கிலங்களை நெருங்கவே பயப்படுவாங்க!

● **இரா.சக்கரபாணி, மதுரை**

**? சீக்கியர்களுக்கு எதிராக நடந்த தாக்குதல்களுக்குக் காரணமான ஜகதீஷ் டைட்லர் மற்றும் சஜ்ஜன் குமார் தேர்தலில் வேட்பாளர்களாக நிறுத்தப் பட்டுள்ளனர். அவர்களைத் தோற்கடித்துத் தங்களின் அதிருப்தியையும் கோபத்தையும் தீர்த்துக் கொள்ளாமல், மத்திய உள்துறை அமைச்சர் மீது பத்திரிகையாளர் ஜர்னைல் சிங் காலணியை வீசியது நியாயமா?**

! ஜர்னைல் சிங்கே சொன்னபடி, கோபம் நியாயமானதுதான்; அதை வெளியிட்ட விதம்தான் பெரிய தவறு. அவரது உணர்வின் நியாயத்தை நிரூபித்துவிட்டது டைட்லர், சஜ்ஜன் குமார் ஆகியோர் நியமனம் வாபஸ் பெறப் பட்டுள்ள நடவடிக்கை.



✱ ஜெராக்ஸ் வேடம்

**❑ ரூ.150/-பரிசு பெறுபவர் :**

**ச.சுஜாதா, ராஜபளையம்**

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி**

**? மது குடிப்பதையும் புகைப்பதையும் நிறுத்தி விட்டதாக பால் தாக்கரே சொல்கிறாரே?**

! பிற மத துவேஷ வன்முறையையும் விட்டு விட்டால், அவர் பால் தாக்கரே! இல்லாவிட்டால் தாக்(குபவ)ரே!

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

**? ''மேட்ச் ஃபிக்ஸிங் ஊழல் ஒரு தேர்தல் பிரச்னையே அல்ல'' என்று முன்னாள் கிரிக்கெட் கேப்டன் அஸாருதீன் கூறியது குறித்து?**

! அஸார் அல்வா கொடுக்கிறார். மேட்ச் ஃபிக்ஸிங் ஊழலுக்கும் நேர்மைக்கும் சம்பந்தமிருக்க. நேர்மையில்லாதவங்க அரசியலுக்கு வந்தா, மக்களோட வரிப் பணமும் எதிர்காலமும் க்ளீன் போல்ட் ஆயிடும்.

● **சி.இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி**

**? தற்போது தமிழகம் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது?**

! என்ன சந்தேகம்? தேர்தலை நோக்கித்தான்!

● **பாலு, உடையநாடு (தஞ்சை)**

**? சுதந்திரம் அடைந்து அறுபதாண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் நாட்டில் வறுமையும் ஜாதி - மத துவேஷமும் இருப்பது கேவலம் அல்லவா?**

! இவ்வளவு பெரிய ஜனக்

கூட்டம் கொண்ட தேசத்தில், சமச்சீர் வளர்ச்சியைக் கொண்டுவரத் தாமதமாவதில் வியப்பில்லை. ஆனால், மத - இன துவேஷங்களை, தலைவர்கள் என்று சொல்லப்படுபவர்களே தங்கள் சொல்லாலும் செயலாலும் வளர்ப்பதுதான் கேவலம்.

**● லெ.நா.சிவகுமார், சென்னை - 33**

***? ''ராகுல் காந்தி ஓர் அறியாச் சிறுவன்; நூறு கோடிக்கும் மேலான மக்கள் தொகையை ஆளும் பொறுப்புக்கு அவர் உகந்தவரல்ல'' என்று சொல்கிறாரே அருண் ஷோரி?***

! இன்றைக்கு மன்மோகன் சிங்தான் காங்கிரஸின் பிரதமர் வேட்பாளர். இன்றைய தேர்தல்தான் இன்று நம் கவனத்தைக் கவர வேண்டும். அருண் ஷோரி போன்றவர்கள் வாக்காளர்களைக் குழப்பக் கூடாது.

**● ஆர்.தங்கராஜ், திருப்பூர்**

***? வரும் நாடாளுமன்றத் தேர்தல் மூலம் நம் நாட்டில் நல்லாட்சி அமையுமா?***



* அரசியல் அல்வா

! எந்த ஒரு கட்சிக்கும் பெரும்பான்மை கிட்டாது என்றே இன்றைய சூழல் உணர்த்துகிறது. இந்நிலையில் குதிரை பேரம் மூலம்தான் ஆட்சியே அமையும் என்கிற அச்சுறுத்தல் இருக்கையில், நல்லாட்சி பற்றி எவ்வாறு நம்பிக்கை கொள்வது?!

**● கு.அருணாசலம், தென்காசி**

***? மு.க.அழகிரிக்கு மத்திய அமைச்சரவையில் எந்த மந்திரிப் பதவி அழகு?***

! தொண்டர் பாதுகாப்பு மற்றும் பிரயோகத்துறை.

**● ரா.தேன்மொழி, சென்னை - 92**

***? அயன் என்ற சொல் தமிழ்ப் பேரகராதியிலேயே இல்லையே?***

! அயன் - அருகன், தசரதன் தந்தை, பிரமன், சர்க்கரை சார்ந்தது, சாதாரணமானது, சரியானது (அயனானது) என்று பல பொருள் உண்டு. படத்துக்கு எது பொருந்தும் என்று தோன்றுகிறதோ, அந்த அர்த்தத்தை வைத்துக் கொள்ளவும். எதுவும் பொருந்தவில்லை என்றால் விட்டுத் தள்ளுங்க!



* குழப்பும் யுக்தி

**● ச.சுஜாதா, ராஜபாளையம்** ☐

***? தனியார் பள்ளிகளில் 'கட்டணம்' உயர்த்தியுள்ளது குறித்து அரசு தலையிட உரிமை இல்லாத போதிலும், லோக் சபா தேர்தலுக்குப் பிறகு கட்டண உயர்வு குறித்து சட்ட ரீதியாக நடவடிக்கை எடுக்கப்படும் என்று தமிழக அரசு அறிவித்துள்ளதே - இது பற்றி?***

! கல்வி வியாபாரமாகிப் போனது வருந்தத் தக்கதே. எனினும் தனியார் கல்லூரிகள் வசூலிக்கும் கட்டணங்களுக்கு உச்ச வரம்பே இல்லை. ஏன்? அவற்றின் உரிமையாளர்கள் அல்லது அவர்கள் பின்னே நிற்பவர்கள் அரசியல்வாதிகள் என்பதால்! தனியார் பள்ளிக் கட்டணங்களை மட்டும் குறைக்க ஆட்சியினருக்கு என்ன தார்மிக உரிமை இருக்கிறது?

**● சி.மகேஷ், திருச்சி**

***? தி.மு.க.வுடன் கூட்டணியாம். ஆனால், காங்கிரஸுக்கு ஆதரவாகப் பிரசாரம் கிடையாதாம்! திருமாவளவனின் பேச்சு எப்படி?***

! புலிகள் விஷயத்தில் தி.மு.க.வின் இரட்டை வேஷம் எப்படியோ, அப்படித்தான் திருமாவளவனின் பேச்சு. ●

★ ரூ. 75/- பரிசு பெறுபவர்:
**எஸ்.உஷா, மதுரை**

2

# கடவுளின் பெயருக்குக் காரணமா?

கையில் சக்கரத்தைத் தாங்கி இருப்பதால் சக்ரதாரி. புல்லாங்குழலை வைத்திருப்பதால் முரளிதரன். அர்ஜுனனுக்குத் தேரோட்டியதால் பார்த்தசாரதி.

இதே வகையில் பண்டரிபுரத்தில் வசிப்பதால் பண்டரிநாதன். வெண்மையின் (தூய்மையின்) உறைவிடம் என்பதால் பாண்டுரங்கன். ஆனால், விட்டலன் என்று பாண்டுரங்கன் அழைக்கப்படுவது ஏன்?

ரயில் ஷோலாபூரை அடைந்தபோது கூட இந்தக் கேள்விக்குப் பதில் தெரியவில்லை. சக பயணியான வட இந்தியர் ஒருவரை, இது குறித்துக் கேட்டபோது, ஒரு நிமிடம் யோசித்துவிட்டு, ''கடவுளின் பெயருக்கெல்லாம் காரணம் வேண்டுமா என்ன?'' என்று தத்துவார்த்தமான ஒரு பதிலை வீசினார். விடை தெரியாது என்பதை அவர் நேரடியாகவே ஒப்புக் கொண்டிருக்கலாம்!

ஆனாலும் எங்களுக்கு உதவும்படியான ஏதாவதொரு தகவலைக் கூறிவிட வேண்டும் என்ற உந்துதலோடு, ''ஷோலாபூர் ரயில் நிலையத்திலிருந்து பஸ் நிறுத்தம் போய்த்தான் பண்டரிபுரம் போக வேண்டும். ரயில்வே நிலைய வளாகத்துக்குள் நிற்கும் ஆட்டோவில் ஏறி விடாதீர்கள். யானை விலை வசூலித்து விடுவார்கள். ஸ்டேஷனுக்கு வெளியே போனால், ஆட்டோ சீப் அண்ட் பெஸ்ட்'' என்றார்.

ரயில் நிலையத்திலிருந்து பேருந்து நிலையம் சுமார் நான்கு கிலோ மீட்டர் என்பதை அறிந்தோம். அப்படி என்ன கேட்டுவிடுவார்கள்? சென்னைவாசியான நம் கண்முன் ஐம்பதிலிருந்து ஐந்நூறு ரூபாய் நோட்டு வரை வந்து சென்றன.

ரயில் நிலையத்தில் இருந்து வெளியேறியதுமே ஓர் ஆட்டோக்காரர் நம்மிடம் வந்து, ''என்ன ஸார் பஸ் ஸ்டாண்ட் போகணுமா? வாங்க போகலாம்'' என்றார். அளிக்கப்பட வேண்டிய கட்டணம் எவ்வளவு என்று கேட்டபோது வந்த விடை அதிர்ச்சியை அளித்தது. ''இருபது ரூபாய்''. இதுவா யானை விலை? அதுவும் பார்த்தவுடனேயே வெளியூர்க் காரர் என்பதை அறிய முடிவதுடன், கையில் லக்கேஜ்களுடன் வந்து இறங்கியவர்களுக்கு!

சும்மாவானும், ''நாலெட்டு நடந்தால் பத்து ரூபாய்க்கே வருவார்களே'' என்றோம். ''கூட யாரையாவது ஏற்றிக் கொள்வார்கள் ஸார்'' என்றார் ஆட்டோக்காரர் பரிதாபமாக!

ஷோலாபூர் பஸ் நிலையத்திலிருந்து பண்டரிபுரத்துக்கு அடிக்கடி பேருந்துகள் செல்கின்றன. சுமார் ஒன்றரை மணி நேரத்தில் பண்டரிபுரத்தை அடைந்துவிடலாம்.

போகும் வழி ஆங்காங்கே மலைப் பாதை போல் ஏற்ற இறக்கங்களுடன் அமைந்திருந்தது. மாலை ஆறரை மணிக்கே, ஏதோ நள்ளிரவைப் போல காரிருள் சூழ்ந்திருந்தது. காரணம், இரு புறமும் கட்டடங்களே கிட்டத்தட்ட இல்லை. விவசாயக் கழிவுகள் ஆங்காங்கே எரிக்கப்பட்டிருக்க, நடுநடுவே ஜகஜ்ஜோதியாக தீ!



'கஜானன் மஹராஜ் மடத்தில்' தங்கலாம் என்று ஓர் ஆலோசனை அளிக்கப்பட்டிருந்ததால், பண்டரிபுரத்தை அடைந்ததும் ஜட்கா வண்டியில் ஏறி அங்கு பயணித்தோம்.

அது பெரிய வளாகம். சுமார் நானூறு அறைகள் கொண்ட மடம். நுழைவாயிலும், உள்ளே இருக்கும் கஜானன் மஹராஜ் மந்திரும் வசீகரமாக இருந்தன. பெயரைக் கேட்டதும் விநாயகர் கோயில் என்று எண்ணிவிட வேண்டாம். அங்கு தங்கி சேவைபுரிந்த கஜானன் என்ற மகானின் நினைவாக எழுப்பப்பட்டுள்ள நினைவகங்கள் இவை.

அளிக்கப்பட்ட அறை நவீனமாகவே இருந்தது. ஆனால், வேறு சில கெடுபிடிகள்தான் நாம் எதிர்பாராதவை. ''கட்டிலோடு உள்ள அறைகள் கொஞ்சம்தான். அவற்றில் இடம் இல்லை. கட்டில் இல்லாத அறையில் தங்கலாம். ஆனால் அளிக்கப்படும் படுக்கை, தலையணைகளை நீங்களேதான் சுமந்துகொண்டு அடுத்த கட்டடத்தில் இரண்டாம் மாடியில் உள்ள உங்கள் அறைக்குச் செல்லவேண்டும். காலி செய்யும்போதும் படுக்கையை நீங்கள்தான் கொண்டுவந்து அதற்குரிய அறையில் வைக்கவேண்டும்,'' என்றார் அலு

அருண் சரண்யா

**அபங்க அமுதம்**

*ஜேதே ஜாதோ தேதே து மாஜா*
*ஸாங்காதீ*

*சாலவிஸீ ஹாதீ தருனியா*
*சாலோ வாடே ஆஹீ துஜாசி ஆதார*
*சாலவிஸீ பார ஸவே மாஜா*
*போலோ ஜாதா பரள கரிஸீ தே நீட*
*நேலீ லாஜ நீட கேலோ தேவா*
*அவகே ஜன மஜ ஜாலே லோகபாள*
*ஸாயிரே ஸகர ப்ராணஸகே*
*துகா ம்ஹணே ஆதா கேளதா கெளதுகே*
*ஜாலே துஜே ஸுகஅந்தர்பாஹீ*

- பக்த துகாராம்

"இறைவா, நான் எங்கு போனாலும் அங்கு நீ என் நண்பனாகக் கையைப் பிடித்து நடத்திச் செல்கிறாய். நான் உன்னுடைய ஆதாரத்தினால் நடக்கிறேன். என் பாரத்தையும் சுமந்துகொண்டு என்னை நடத்திச் செல்கிறாய். நான் உளறினாலும் அதை அர்த்தமுள்ளதாக ஆக்கிவிடுகிறாய். நான் கூச்சத்தை நீக்கி, தைரியவானாகிவிட்டேன். அனைவருமே என் உறவினர்களாகவும் தோழர்களாகவும் ஆகிவிட்டனர். இப்போது நீ என் உள்ளும் புறமும் நிறைந்திருப்பதால் பரவசத்துடன் விளையாடுகிறேன்."

வலகத்தில் இருந்தவர்.

இங்கு மட்டுமல்ல, பண்டரிபுரத்தில் வேறு சில தங்கும் இடங்களிலும் இதுபோன்ற விதிமுறைகள் இருப்ப

**கஜானன் மஹராஜ் மந்திர். -இந்தப் பெயரைக் கேட்டதும் வினாயகர் கோவில் என்று எண்ணிவிட வேண்டாம். அங்கு தங்கி சேவைபுரிந்த கஜானன் என்ற மகானின் நினைவாக எழுப்பப்பட்டுள்ள நினைவகம் இது.**

தைப் புரிந்து கொண்டு செல்வது நல்லது. தனியாகச் சென்றால் தங்க அனுமதிப்பதில்லை. புகைப்படத்துடன் கூடிய அடையாள அட்டையை வாங்கிக் கொண்டு, அறையைக் காலி செய்யும் போதுதான் தருகிறார்கள். அடையாள அட்டை இல்லையென்றால் தங்க அனுமதி இல்லை!

படுக்கையைச் சுமந்துகொண்டு அறைக்குச் சென்று, குளித்து, உடைமாற்றிக்கொண்டு கிளம்ப எண்ணியபோது மனத்தில் ஒரு சிறு திட்டமிடல் உருவானது.

'சயன ஆரத்தியைத் தரிசிக்கத் தவறாதீர்கள்' என்று குறிப்பிட்டிருந்தார் வெங்கட்ராமன். (சென்னையில் என்னோடு பணிபுரிந்த நண்பர் உமாவும் அவரது கணவர் வெங்கட்ராமனும் நமது பண்டரிபுர நோக்கம் குறித்து அறிந்ததும் காட்டிய உற்சாகமும் பகிர்ந்து கொண்ட தகவல்களும் கொஞ்சநஞ்சம் அல்ல).

கடிகாரத்தைப் பார்த்தோம். இரவு ஒன்பதரை என்றன முட்கள். 'எப்படியும் பக்தரைக்குக் கோயில் மூடிவிடுவார்கள். எனவே, அதற்குள்ளாகச் சென்று விட்டலனைத் தரிசனம் செய்துவிட்டு, அப்படியே அங்கு காத்திருந்து சயன ஆரத்தியையும் அனுபவித்து விடலாம். நாளை காலை பண்டரிபுரத்தின் அருகிலுள்ள பிற இடங்களுக்குச் செல்லலாம்' என்று தீர்மானித்தோம்.



# குரல்களின் தேசத்தில் ஒரு ராஜகுமாரி!

தமயந்தி

தொலைக்காட்சியில் தொலைந்து கொண்டிருந்த தமிழனின் சராசரி வாழ்க்கையில் மறுபடி ஒரு வானொலிப் புரட்சி வரும் என்று யாரும் அவ்வளவு சுலபமா நினைச்சுப் பார்த்திருக்க மாட்டாங்க. இப்ப பெரும்பாலான வீடுகள்ல காலையில் எழுந்த உடனே வானொலியைத்தான் கைகள் இயக்குகின்றன.

எனக்கும் சின்ன வயதிலேயே புத்தகங்கள் போலவே வானொலியின் மேல் காதல். அப்போது இலங்கை வர்த்தக ஒலிபரப்பு வெகு பிரசித்தம். அவர்களின் அட்சர சுத்தமான தமிழ் பிரமிக்க வைக்கக் கூடியது. அப்பாவுக்கும் இலங்கை தான். சரியா ஏழாவது வகுப்பு முழு விடுமுறைல அப்பா எனக்கு ஒரு ட்ரான்ஸிஸ்டர் வாங்கிக் கொடுத்தார். ஒரு கங்காரு தன் குட்டியைச் சுமந்து கொள்வது மாதிரி அதை எங்கே போனாலும் சுமந்தேன். படிக்கும் நேரங்களைக் கூட அந்த நிகழ்ச்சிகளுக்குத் தக்கவே பகுதிபடுத்திக் கொண்டேன்.

அப்ப ரெக்கார்ட் ப்ளேயர்ல பாட்டுப் போட்டுக்கிட்டு ஒரு வானொலி அறிவிப்பாளர் மாதிரி நான் விளையாடி இருக்கிறேன். முதன்முதலா பண்பலை வானொலியில் அறிவிப்பாளரா சேர்ந்த போது அந்த விஷயம்தான் எனக்கு ஞாபகத்துக்கு வந்தது. சமீபத்தில் வெளி வந்த ஒரு சில திரைப்படங்களில் கதாநாயகன் அல்லது நாயகி பண்பலையில் அறிவிப்பாளரா இருப்பது போல கதைகள் வந்தன.

இப்படி வாழ்விலிருந்து பிரிக்க முடியாத ஒரு அங்கமாக பண்பலை வானொலிகள் ஆகிப் போனதை யாருமே மறுக்க முடியாது. அதுவும் சென்னை மாதிரியான பெருநகரங்களில் நிறைய பண்பலை நிலையங்கள் வந்து விட்டன. பண்பலையின் நோக்கம் ஒரு பொதுஜனக் கூட்டத்திடம் பேசுவது அல்ல. குறிப்பிட்ட ஒரு நபரிடம் மனம் விட்டுப் பேசிக் கொள்வதுதான்.

பொதுவாக ஊடகங்களின் தமிழைக் கிண்டல் செய்வார்கள். அது உண்மை இல்லைன்னு முற்றிலுமா நிராகரிக்க முடியாது. ஆனாலும் இப்ப நான் பணிபுரியும் ஹலோ பண்பலையின் முக்கியக் கொள்கை தமிழில் பேசுவது தான். ஏதோ ஒரு இடத்தில் சரியான ஒரு தமிழ் வார்த்தைக்குப் பதிலாக ஒரு ஆங்கில வார்த்தை உபயோகித்தால், அதற்கான அழகான தமிழ் வார்த்தை எங்

களுக்கு நினைவூட்டப்படுகிறது.

சென்ற வருடம் ஒரு நிகழ்வைச் செயல் படுத்தினோம். 'ஈரடித் தமிழ், பரிசுகளு டன் புகழ்' என்று. இதில் அதிகம் கலந்து கொண்டவர்கள் கல்லூரி மாணவர்கள் தாம். இளைஞர்கள் தாய்மொழியை மறந்து விட்டார்கள் என்கிற வாக்கைத் தவிடுபொடியாக்கி விட்டார்கள்.

**வா**னொலி கேட்பதில் ஒரு சௌகர் யம் உள்ளது. கேட்டுக் கொண்டே நமக் கான வேலைகளில் நாம் ஈடுபட்டுக் கொள்ளலாம். அப்படியெனில் அது வெறும் பொழுதுபோக்குதானா? அந்தக் கூற்றுக்கும் பதில் சொல்வது போல் ஒரு நிகழ்வு. நெல்லையின் ஒரு நவீன திரை யரங்கில் படம் பார்க்கப் போனபோது ஒரு சிறுவன் உப்புக் கடலை விற்றுக் கொண்டிருந்தான். அவன் அப்பா குடும் பத்தை விட்டுப் போய் விட்டதாகவும், படிக்க விருப்பம் உள்ளதால் அவன் இப்படி கடலை விற்று வருவதாகவும் சொன்னான். மறுநாள் அந்தப் படத்தைப் பற்றிச் சொல்லும்போது நிகழ்ச்சியில் அவனைப் பற்றியும் சொல்ல, அதற் கடுத்தாற்போல் பேசிய நேயர் அந்தப் பையனின் படிப்புச் செலவை, தாம் ஏற்றுக் கொள்வதாகக் கூறினார். அதற் கடுத்த நாட்களில் பல இடங்களிலிருந்து வந்து சேர்ந்தது பணம்.

வெறும் பொழுது போக்கு சாதனமாக விளங்கும் ஊடகங் களை, பயனுள்ளதாக மாற்றுவது சுலபம். பொதுவாகவே பண்பலை வானொலி அறிவிப்பாளர்கள் லொடலொட பேச் சாளர்கள் என்கிற எண்ணம் உண்டு. தொலைபேசி நிகழ்ச்சிகளில், பேசும் இரு வரைக் காட்டிலும் கேட்டுக் கொண்டிருக் கும் மூன்றாவது ஆளுக்கு அந்த சம்பா ஷணை என்ன பயன் தரப் போகுதுன்னு யோசிக்கிறதுல இருக்கு அந்த மாற்றுவழி.

பண்பலை வானொலிகளின் அடுத்த பரிமாணம், பாடல் குறித்த பின்னணியை முன்வைப்பதுதான். தொலைக்காட்சி களில் இதோ உங்களுக்கான பாடல் என் கிறார்கள். ஆனால் வானொலியில் அந்தப் பாடலைப் பாடியவர், எழுதியவர், இசை யமைத்தவரின் பெயர்களையெல்லாம் சொல்வோம். இது ரொம்ப சாதாரணமான விஷயமா இருக்கும். ஆனா ஒரு பாடல் எழுதிய கவிஞருக்கு அது எவ்வளவு அங்கீகாரம் கொடுக்கும் என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

**எ**ல்லாவற்றையும் விடவும் ரொம்ப சுலபமாக ஒரு வீட்டினுள் உள்ள மனிதர் களிடையே எட்டக்கூடிய வாய்ப்பு வானொலி அறிவிப்பாளருக்குக் கிடைத் திருப்பதால் இன்னும் கூடுதலான பொறுப்புகள் சேர்கின்றன. அடுத்ததாக குரல்களின் வழி ஒரு தனிப்பட்ட மனி தருக்குத் தெம்பு தரும் பணியும் இதில் உண்டு. சோகமான மனநிலை யில் இருக்கும் ஒரு நபர், நிகழ்ச்சி கேட்டு முடிக் கும்போது மெல்ல மன நிலை மாறுவதுண்டு. சில பாடல்களில் அந்த கிரியாஊக்கி உண்டு.

வானொலியின் வீச்சு வெறும் இரைச்சலும், முடிவில்லாப் பேச்சும்

பத்திரிகைக்கும் வானொலிக்குமான இடைவெளியும் விரைவில் குறையும் போல் தோன்றுகிறது.





மட்டுமல்ல. உங்க காதலிக்கு உங்க காதலைச் சொல்ல மட்டுமல்ல. வரலாறு களில் அது ஒரு மனித வரலாற்றை, ஒரு நாட்டின் நிலையைச் சொல்லும் ஊடக மாகச் செயல்பட்டிருக்கிறது.

எங்க ஊர்ப் பக்கம் பீடி சுத்துறதுங் கிறது கிட்டத்தட்ட எல்லா கீழ்த்தட்டுப் பெண்களும் கைவசம் வைத்திருக்கிற தொழில். அவர்கள் எல்லோரின் வீட்டி லும் இருக்கிற இன்னொரு குடும்ப நபர் பண்பலை. பாட்டு கேட்டுக்கிட்டே வேக மாக பீடி சுத்த முடிகிறது என்று அவர்கள் சொல்கிறார்கள். நடுவுல நீங்க பேசுறது னால நாட்டு நடப்பு, உலக நடப்புல்லாம் தெரிஞ்சிக்க முடியுதுங்கறாங்க. எழுதப் படிக்கத் தெரியாத பொதுசனத்துக்கு ஊர்ல எங்க ரேஷன் கார்டு கொடுக்காங்கனு தெரிய வைக்கிறது போக, யார் நாட்டை ஆளுறாங்கன்னும் தெரியணும் இல் லையா?

**வ**ரும் காலங்கள்ல இப்போ வெகு ஜன ஊடகமா மட்டுமே அதிகமாக வெளிச்சப்படுத்தப்படும் வானொலி, சிறகு முளைத்த பறவையாய் பல அவதாரங்கள் எடுக்கக்கூடும்.

தொலைக்காட்சியில் இப்போது இருப் பது போல் தனித்தனியான அலைவரிசை கள் செய்திக்கு, திரைப்படத்துக்கு, சமூகத்துக்கு என பல தளங்களில் செயல்படுத்தப்படலாம். அதே போல் பத்திரிகைக்கும் வானொலிக்குமான இடைவெளியும் விரைவில் குறையும் போல் தோன்றுகிறது. இன்னும் நாடக வடிவில் உங்க அபிமான சிறுகதைகள், நாவல்கள் அப்போது சாத்தியமாகும். ஹிதேந்திரன் பற்றி எங்கள் சென்னை கிளை எடுத்த ஒரு ரேடியோ டாக்குமெண் டரி பல விருதுகளைத் தட்டிப் போனது. பல பரிமாணங்களில் செய்யப்படும் இது போன்ற முயற்சிகள் வானொலியின் வீச்சை இன்னும் விஸ்தாரப்படுத்தும். செய்திகள் பண்பலையில் வலம்வரும் காலத்தில் நிறைய புரட்சிகள் ஏற்படும்.

குரல்களின் தேசத்தின் மிகப் பெரிய சலுகை, கேட்கிற யாரானாலும் அந்தத் தேசத்து ராஜாவாகவோ, ராணியாகவோ ஆகலாம் என்பதுதான். யார்தான் ஆசைப் பட மாட்டார்கள் சொல்லுங்கள். ●



# ஷாக் ட்ரீட்மென்ட்

அமிர்தம் சூர்யா

**போ**ஸ்ட்மார்ட்டம் முடிந்து வீடு திரும்பும் சடலத்துக்குக் காத்திருக்கும் சாவு வீட்டு ஜனங்களைப் போல... கண்ணீரில் கண்களை மிதக்க விட்டபடி அம்மாவும், குடித்து குடல் வெந்து செத்துப்போன தன் புருஷனின் நினைவுகளைச் சபித்தபடி இங்கேயே வேர்விட்ட சித்தியும், தம்பியும் வாசலில் காத்திருந்தனர்.

வீட்டு வாசலில் சைக்கிள் ரிக்ஷா 'கிறீச்' சிட்டு நின்றது. சசி இறங்குவதற்குள் மதுவிடம் சுயத்தை அடகு வைத்திருந்த அவரை மற்றவர்கள் தூக்கி வீட்டில் கிடத்தினர். மல்லாக்க கிடக்கும் கரப்பான் பூச்சி போலிருந்தார். மறுநாள்... நகர்ந்து போன மேகமாய், போதை விலகியிருந்தது. ஆயினும் அவரை இருமலும் காய்ச்சலும் இரண்டு நாள் முடக்கிப் போடும் எனப்பட்டது.

தன் மாஸ்டரின் நினைவுகளை 'ரீவைண்ட்' செய்து பார்த்தாள் சசி. எப்படியும் நாளை அப்பா குனிந்த தலையோடு திருநீறு பூசிய நெற்றியோடு வேலைக்குக் கிளம்பக் கூடும். அதற்குள் தன் வகுப்புத் தோழன் கவினைப் பார்த்துவிடத் திட்டமிட்டாள்.

எட்டாம் வகுப்பில் நைட் ஸ்கூல் படிக்கும் போது... மாஸ்டர் ஜானகிராமின் குழந்தை அடம் பிடித்து அழும். பசியில்லாதபோது அதனோடு யாராவது கொஞ்சிப் பேச அது விரும்பும்போலும். தாயில்லா அக்குழந்தையின் அழுகையை நிறுத்த மாஸ்டர் செய்த யுக்தி, விளையாட்டான விசித்திரமாக இருந்தது. அந்த யுக்தியைப் பயன்படுத்தி அப்பாவுக்கு ஒரு சின்ன ஷாக் ட்ரீட்மென்ட். அவர் ஒரு க்ஷணம் யோசித்தால் போதும். அவர் சூடு சுரணையற்ற ஜன்மம் அல்ல. குடியின் சூழலிலேயே வளர்ந்தவர் அல்ல. அடுத்தவரின் ஏச்சுக்கும் பேச்சுக்கும் கவலைப்படாத விட்டேத்தி அல்ல. எனவே, அவரைத் திருத்திவிடலாமெனப்பட்டது மகள் சசிக்கு.

''பலவீனப்பட்டு, அற்ப மயக்கத்துக்கு ஆசைப்பட்டு, குடியிடம் தன்னை ஒப்படைத்துவிட்டு அதிலிருந்து மீள முடியாமல் தனது ஆளுமை பலமிழக்கும்போது அந்த இயலாமையைக் கோட்பாடாக மாற்றி, குடிக்கு நியாயம் கற்பிக்கிறார்கள். அந்த இயலாமையைச் சுட்டிக்காட்டி ஈகோவைச் சீண்டிவிட்டால் விபரிதமாய் நல்லது நடக்க வாய்ப்புண்டு'' என்றான் கவின். சசியும் தேர்தல் களத்தில் நிற்கும் சுயேட்சை வேட்பாளரைப் போல நம்பிக்கையைச் சேமித்துக் கொண்டிருந்தாள்.

இரண்டு நாட்கள் கடந்தன. எப்போதும் போல் யாரோ புண்ணியவான் தயவில் போதையோடு வீடு வந்து சேர்ந்தார் அப்பா. அது அசல் அப்பாவை வெளியேற்றி விட்ட 'அப்பாவின் போலி' யாகப்பட்டது. இரவு முழுக்க இருட்டைத் துரத்தி விட்டு, வேர்க்க விறுவிறுக்க பாதரசத்தை முலாம் பூசியதுபோல பனிச்

அனந்தபத்மநாபன்






# தவணைமுறை தற்கொலை

சென்று வெளிவந்து நின்றது சூரியன்.

ஞாயிற்றுக்கிழமை என்பதால் எட்டு என்பதைச் சோம்பலோடு காட்டியது சுவர்க் கடிகாரம். டி.வி.யின் முன் அம்மா, சித்தி, தம்பி ஏற்கெனவே திட்டமிட்டபடி உட்கார்ந்திருக்க, நேற்றைய போதையின் சுவடாக தலைக்குள் பதியமிட்டிருக்கும் தலைவலியை விரட்ட ஸ்ட்ராங் டீயை உறிஞ்சியபடி அப்பாவும் டீ.வி.யின் முன்னாலிருந்தார். செய்தி சேனலை நிறுத்திவிட்டு, நண்பன் கவின் டிஜிட்டல் கேமராவில் எடுத்து சி.டி.யாக மாற்றிக் கொடுத்த காட்சித் தகடை டி.வி.டி. பிளேயரில் நுழைத்தாள் சசி.

இறுக்கமும் பதற்றமும் பாம்பென மாறி, அந்த அறையை ஒரு தவளையைப் போல கவ்வ ஆரம்பித்தது. டீ.வி.யில் அப்பா தெரியத் துவங்கினார். சுற்றும் முற்றும் கள்வனின் பார்வையைப்போல் படரவிட்டு தயங்கித் தயங்கி, தலைகுனிந்து டாஸ்மாக்கில் அப்பா நுழைகிறார்.

குடிக்கிறார். தலையில் கை வைத்து அழுகிறார். வாணான்னு சொன்னாலும் வான்னு கூப்பிடுதே இந்தத் தண்ணி சனியன்னு வாயிலுள்ளதைத் துப்பகிறார். கால்கள் தடுமாறி புதைகுழியில் கால் வைத்த யானையாய் தொபீரென விழு கிறார். எழுந்து வெளியே வந்தவர் வாந்தி யோடு மயங்கி விழுந்துகிடக்க, கையி லிருந்து சிதறிய கறித்துண்டு




களை ஒரு நாய் தெனாவட்டாக அவர் அருகிலேயே நின்று சுவைத்துக் கொண் டிருக்கிறது. கிண்டலோடு ஒரு ஓங்கிக் குழு அப்பாவைத் தாண்டிச் செல்கிறது. எல்லோர் பார்வையும் ஈக்களென மொய்க்க, அழுதபடி அப்பாவைத் தூக்கு கிறாள் சசி. காட்சி நின்றது.

எல்லோரும் வணக்கம் வைக்கும் தன் புருஷனின் இப்போதைய நிலையைப் பார்த்த அம்மா தேம்பித் தேம்பி அழு கிறாள். சசி அப்பாவின் கையை வாஞ்சை யோடு பிடிக்கிறாள். குழந்தை அழுகிற போது ரெக்கார்டில் பதிவு செய்து அடுத்த முறை அழும் அந்தக் குழந்தைக்கு, அதன் குரலை ஒலிபரப்ப அது பேந்தப் பேந்த விழித்து அழுகையை நிறுத்திவிட மாஸ்டர் செய்த விளையாட்டை வேறு ரூபத்தில் அப்பாவிடம் அரங்கேற்றினாள் சசி.

இது தமிழ் சினிமா யுக்தி போலிருக் கிறது என கவின் சொன்னாலும், இந்தப் பழைய யோசனை புதுமையாகப்பட்டது சசிக்கு. இறுக்கமாக, டீ.வி.யை வெறித்த படியிருந்த அப்பாவால் அதற்குமேல் அடக்கமுடியவில்லை. 'ஓ'வென தலையில் அடித்துக் கொண்டு கதறி

**அப்பாவின் அழுகை மது நிரம்பிய கண்ணாடிக் கோப்பை உடைந்து சிதறும் சாயலில் இருந்தது.**

அழுதபடி சசியின் தோளில் சாய்ந்தார். அந்த அழுகை மது நிரம்பிய கண்ணாடிக் கோப்பை உடைந்து சிதறும் சாயலில் இருந்தது. இப்போது அம்மாவின் அழுகை வேறு அர்த்தத்தை மொழி பெயர்க்க, அறையெங்கும் நம்பிக்கை நாற்றுக்கள் முளைத்திருந்ததாய்ப்பட்டது. இந்த அப்பா குழந்தை இனி அழுகையை நிறுத்தி விடுமெனத் தோன்றியது.

(தொடரும்)

**எச்சரிக்கை! தற்கொலையின் இரண்டாவது தவணை இந்த டயலாக் :**
**"கொஞ்சமாவது உடம்புல ஆல்கஹால் இருக்கணும்னு சொல்றாங்கடா. 'ஒப்புக்குச் சப்பாணிதான் பீர் குடிப்பான்க. அடல்ட்ஸ் எல்லாம் ஹார்ட் ட்ரிங்க்ஸ்தான். சன்டே மட்டும்தானே, தெனமுமா குடிக்கப் போறோம்?"**

சித்திரை சிறப்பிதழில் இடம்பெற்ற நான்கு தொடர்களுமே தமக்கேயுரிய பாதையில் வெகுஜோராகப் பயணித்து முத்திரை பதித்துள்ளன.

- டி.எம்.விஸ்வதா, திண்டுக்கல்

70 முதல் 7 வரை முதல் பாகம் நளபாகம் என்றால் இரண்டாம் பாகம் நிச்சயம் பீம பாகமாகத்தான் இருக்கும்.

- கிருஷ்ணா.ராஜ்கோபால், சென்னை-92

நாட்டு நலனில் கல்கிக்கு உள்ள அக்கறையை 'அச்சுறுத்தும் இரட்டை அபாயம்' தலையங்கத்தில் கண்டோம்.

- கே.வி.ராமன், சென்னை - 73

தேர்தல் ஜோக்குகளை நிறைய வாரி வழங்கி அசத்திவிட்டீர்கள். நன்றி.

# சூழல் மாறணும்!

- ஆர்.பி.ஜெயச்சந்திரன்,
பூனாம் பாளையம்

ஸ்ரீலலிதா மூன்றாம் பாகம் முடிந்து விட்டதே என்கிற கவலையில் இருந்த எங்களுக்கு, தீராத விளையாட்டு விட்டலன், ஒரு வரப்பிரசாதம்.

- பி.ஹேமாம்புஜம்,
சென்னை - 17

''சதையையும், வன்முறையையும் நம்பிப் படம் எடுக்கும் சூழல் கண்டிப்பாக மாறும்'' என்கிற விக்கிரமனுக்கு 'மரியாதை' கலந்த பாராட்டுகள்.

- என்.சண்முகம்,
திருவண்ணாமலை

தேர்தல் களம் கார்ட்டூன் மூலம் இன்றைய அரசியல் அவலங்களை அப்படியே படம் பிடித்துக் காட்டி விட்டீர்கள் சபாஷ்.

- டி.முருகேசன், திருவாரூர்

'ஜில்லுன்னு இருங்க' கோடை டிப்ஸ் மிகவும் பயனுள்ளவை.

- வி.அலமேலு, கும்பகோணம்



காற்று வரும் பருவம்!
அடுத்த வாரம்



## பாலிடிக்ஸ் போட்டி - 2

இங்கே சில தலைவர்களும், தேர்தல் களத்தில் எதிர்கட்சியினர் மீது அவர்கள் விட்ட அறிக்கை அம்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. யார் எதைச் சொன்னார்கள் என்பதைக் கண்டுபிடித்துப் பொருத்தி, இப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். சரியாகப் பொருத்தும் பத்து பேருக்கு குலுக்கல் முறையில் தலா ரூ.100/- பரிசு.

**கடைசித் தேதி : 2.5.2009.**

**ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

# சொன்னது யாரோ?

| | |
|---|---|
| 1. அத்வானி | அ. என்னைக் கவர்ந்தது கம்யூனிஸம்தான். கம்யூனிஸ்டுகள் அல்ல. |
| 2. மன்மோகன் சிங் | ஆ. ஐக்கிய முற்போக்கு கூட்டணி ஒரு பங்குதாரர் நிறுவனம். |
| 3. சோனியா | இ. இரும்பு மனிதர் அத்வானி உருகிப்போனது ஏன்? |
| 4. கலைஞர் | ஈ. அத்வானி ஒரு ஆர்.எஸ்.எஸ். அடிமை |
| 5. வை.சிவபுண்ணியம் (கம்யூ. எம்.எல்.ஏ.) | உ. மாற்றி மாற்றிப் பேசுகிறார் மன்மோகன் சிங். |
| 6. ராஜா (கம்யூ.) | ஊ. அ.தி.மு.க. மோகன ராகம்; தி.மு.க. முகாரி ராகம்! |

**உங்கள் விடைகள் :**

1. 2. 3. 4.
5. 6.

**உறை மீது பாலிடிக்ஸ் போட்டி - 2 என்று மறவாமல் குறிப்பிடவும்.**

என் பெயர் : ..........................................

விலாசம் : ..........................................

..........................................

..........................................

கல்கியில் விரும்பி வாசிப்பது :

..........................................

# கார்த்திக் – அனிதா



எதிரெதிர் வீடுகளில் வசிக்கும் கார்த்திக்கும், அனிதாவும் ஒரே கல்லூரியில் படிக்கின்றனர், அடிக்கடி ஒருவரை ஒருவர் காட்டிக் கொடுத்து, மாட்டிவிட்டு மற்றவர்களிடம் அடிவாங்குகின்றனர்; தாங்களும் அடித்துக் கொள்கின்றனர். இவர்களுடைய விளையாட்டு நட்பு எப்படி காதலாக மாறுகிறது என்பதே படத்தின் கதை.

கார்த்திக்காக வரும் ரத்தனும், அனிதாவாக வரும் மஞ்சுவும் அறிமுகங்கள். இரட்டைச் சடையும் மின்னல் பார்வையுமாக சட்டென நம் மனத்தைக் கொள்ளையடிக்கிறார் மஞ்சு. எதிர் வீட்டுப் பையனாக வரும் ரத்தனின் நடிப்பில் இயல்பு... முதல் காட்சியிலேயே ஸ்கோர் வாங்குகிறார். கார்த்திக்கின் தந்தையாக வரும் கோட்டா சீனிவாசராவ், தன் மகனுக்காக ராஜன் பி.தேவிடம்,

''எனக்காக இத நீ செய்வதான...'' எனக் கெஞ்சும் போதும்,

''நான் சமைச்சதை நீயே சாப்பிடலைன்னா... அக்கம் பக்கம் இருக்கிறவங்க என்னைப் பத்தி, என் சமையலைப் பத்தி என்ன நினைப்பாங்க...'' என மகனிடம் கொஞ்சும் போதும் பிரமாதப்படுத்துகிறார்.

நா. முத்துக்குமாரின் 'அய்யய்யோ' யுகபாரதியின் 'தடதடதட ரயில் அழகு' பாடல்களில் ஜாக் ஆனந்தின் இசையில் இளமைத் துள்ளல்.

''அழகான பொண்ணைப் பெத்த அப்பனுங்களுக்கு எல்லாம் இதுதான் கதி...!'' நகைச்சுவை நடிகர் பேசும் காட்சியில் தியேட்டரில் சிரிப்பலை. ஒளிப்பதிவு சுமார் ரகம்தான்.

இருவரும் தொடர்ந்து சண்டை போட்டுக் கொண்டேயிருப்பது சலிப்பூட்டுகிறது.மேலும் இருவருக்குள்ளும் காதல் தோன்றுவதற்கான அழுத்தமான காரணமில்லாதது திரைக்கதையில் விழுந்த ஓட்டை. கார்த்திக், அனிதா திரையில் சண்டைக் கோழி.

— கிராபியென் ப்ளாக்

டென் ஸ்போர்ட்ஸ், ஸ்டார் ஸ்போர்ட்ஸ், சி.என்.என்., பி.பி.சி. என்று அத்தனை சர்வதேச சேனல்களிலும் பிரபலமான இந்தியர். அகில உலக கார் ரேஸ் வட்டாரத்தில் 'எக்ஸப்ஷனல் டேலண்ட்' என்று புகழப்படுபவர் நரேன் கார்த்திகேயன். இந்தியாவைப் பொறுத்த வரை வெறும் கனவாக இருந்து வந்த ஃபார்முலா ஒன் வட்டத்துக்குள் காலடி எடுத்து வைத்த முதல் இந்தியர். நரேன் கொங்கு மண்ணில் பிறந்தவர் என்பதில் தமிழகத்துக்குப் பெருமை. அவரைப் பற்றின கரம் மசாலா பிட்ஸ்:

சிறு வயது முதலே நரேனுக்கு மிகவும் பிடித்த விஷயம் கார். கடந்த ஐம்பது வருடங்களில் இந்தியர்கள் யாராலும் ஃபார்முலா ஒன் பந்தயத்துக்குள் நுழைய முடியவில்லை; எனவே, எப்படியும் உள்ளே நுழைந்துவிட வேண்டும் என்கிற தணியாத வெறி. இதுதான் நரேனின் இன்றைய முத்திரை பதிக்கும் முன்னேற்றத்துக்கு முதல் அத்தியாயம்.

''எஃப் 1 பந்தயத்தில் பங்கேற்க ஸ்பான்சர்களின் உதவி மிகவும் அவசியம். இந்தியாவைப் பொறுத்தவரை இதில் சில பல சிக்கல்கள் இருந்தன. இங்கே கிரிக்கெட் போல, மேலைநாடுகளில் மோட்டார் பந்தயங்களுக்கு ஸ்பான்சர்கள் சுலபமாகக் கிடைக்கிறார்கள்.

இந்தியா முழுவதும் இப்போது ஐம்பதுக்கும் அதிகமான கோ-கார்ட்டிங் மையங்கள் வந்திருப்பதாலும், டி.வி. சேனல்களில் எஃப் 1 பந்தயம் ஒளிபரப்பப்படுவதாலும், இளைஞர்களிடையே கார் பந்தயம் பற்றிய ஆர்வம் அதிகரித்துள்ளது.

எஃப் 1 பந்தயத்தில் வெற்றிபெற வேண்டுமானால் முதல் தேவை ஸ்பீட். அதற்கேற்ப நம் கார் வடிவமைக்கப்பட்டிருக்க வேண்டும். காரில் பொருத்தப்படும் சின்ன உதிரிபாகங்கள் கூட வெற்றி, தோல்வியை நிர்ணயிக்கும் காரணிகளாக அமைகின்றன. கார் சூப்பராக இருந்து விட்டால் மட்டும் போதாது. எஃப் 1 பந்தயத்தில் பங்கேற்கிற டிரைவரது உடல் தகுதியும் மிகவும் முக்கியம்'' என்கிறார் நரேன்.

''தோல்விகள் துவளச் செய்யுமா?'' என்று கேட்டால், '' வெற்றியை நோக்கி நம்மை முடுக்கி விடும் பயிற்சியாளர் நம் தோல்விதான்'' என்கிறார்.




- மௌலி

# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

## டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

## கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது



## தமிழ்நாட்டின் முதல் PET-CT

**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : **93814 36899**
**93814 36896**

10% Special Discount On Sunday for Master & Executive Health Check-up

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* கேன்சரை அறிகிறது. * கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. * கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. * சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. * இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. * மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. * ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). * மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. * நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி – 93451 20265, 93810 30712



**#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.**
**Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282**
**E-mail : info@drkamakshimemorialhospital.org**
**Website : www.drkamakshimemorialhospital.org**

